# மொழியைப் பற்றி

இலெனின்

தமிழ்ச்சுருக்கம் :

த. கோவேந்தன்

அப்பல்லோ வெளியீடு
29, திலக் தெரு,
தியாகராய நகர்,
சென்னை-600 017.

# பாராட்டுரை

**சிலம்பொலி சு. செல்லப்பன்**
**இயக்குநர்-தமிழ் வளர்ச்சி இயக்ககம், சென்னை.**

''இல்லையென்ற சொல்லை உலகில் இல்லையாகச் செய்வோம்'' எனச் சூளுரைத்துப் பாடுபட்டு வெற்றி கண்டவர் மாவீரர் இலெனின்.

**உலகம் உண்ண உண் ; உடுத்த உடுப்பாய்**
**புகல்வேன் உடைமை மக்களுக்குப் பொது ;**
**புவியை நடத்து பொதுவில் நடத்து -**

எனக் கொள்கை முழக்கம் செய்த இலெனின் மொழிபற்றிய தெளிந்த சிந்தனைகளைத் திரு. கோவேந்தன் இந் நூலுள் தந்துள்ளார்.

இந்தியாவைப் போலவே உருசியாவும் பல் வேறு மொழிகள் கொண்ட நாடு. சார் மன்னனின் கொடுங்கோலாட்சியிலிருந்து விடுபட்டு மக்க ளாட்சி மலரக் காரணமாயிருந்த இலெனின், அந் நாட்டு மொழிச் சிக்கல்களுக்குச் சொன்ன தீர்வு நம் நாட்டிற்கும் முற்றிலும் பொருந்துவதாகும். பொதுவுடைமைத் தோழர்கள் மொழியில் மிகு நாட்டம் கொள்வதில்லை என்று பொதுவாகச் சொல்லப்படும் கூற்று எவ்வளவு தவறானது என்பதை இந் நூலைப் படிப்போர் நன்குணர்வர்.

உருசிய மொழியில் தேவையான சொல் இருக்கும் போது வேண்டுமென்றே பிறமொழிச் சொற்களைக் கையாளுவதை இலெனின் கடுமை யாகக் கண்டித்தார் (பக். 19) என்னும் கூற்றினைக் தனித் தமிழ்க் கோட்பாட்டுக்கு எதிரானோர் சிந்தித்தல் வேண்டும்.

''அவரவர் தத்தம் தாய்மொழியில் கல்வி கற்கும் உரிமை இருக்க வேண்டும் (பக். 35);

நாடு முழுவதும் கல்வி அவரவர் மாநில மொழிகளிலேயே கற்பிக்கப்படல் வேண்டும் (பக். 41); நல்ல அரசு எல்லா மொழியினருக்கும் மொழி பெயர்ப்பாளர் மூலமாக அரசாங்கத்தின் நடவடிக்கைகளை அறிந்து கொள்ளக்கூடிய வாய்ப்பையும் வசதியையும் உண்டாக்கித் தரல் வேண்டும் (பக் 44)'' என இலெனின் கூறியுள்ள இம் மொழிக் கருத்துகள் ''ஆட்சி மொழிச் சிக்கலில் அல்லற்படும் மக்கள் எங்கு வாழ்ந்தாலும் எந் நாட்டினர் ஆனாலும் பெறவேண்டிய தெளிவைப் பெற்று ஆட்சிமொழிக் கொள்கையை அமைத்துக் கொள்ளப் பெரிதும் பயன்படும்'' (பக் 42) என்பது திண்ணம்.

உருசிய மொழி அகராதி எதிலுமில்லாத 4000 சொற்களை இலெனின் பயன்படுத்தியுள்ளார்; அவருடைய பேச்சுகளிலும் கருத்துகளிலும் 12000 சொற்கள் ஒரே ஒருமுறை மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளன. அவர் மொத்தம் 37500 சொற்களைப் பயன்படுத்தியுள்ளார் என்பன போன்று இலெனினின் மொழி ஆளுமை பற்றிய செய்திகள் நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றன.

மொழிச் சிக்கலுக்குத் தீர்வுகாண விழையும் ஒவ்வொருவர் கையிலும் இருக்க வேண்டிய அருமையான நூல் இது. திரு. கோவேந்தன் ஒரு சிறந்த மொழிச் சிந்தனையாளர் என்பதால் இலெனினின் சிந்தனையில் தோய்ந்து புரிந்து கொள்ளக் கடினமான பகுதிகளையும் எளிமையாக்கி இனிய நடையில் எல்லோரும் துய்க்கும் வண்ணம் தந்துள்ளார். அவருடைய இவ்வரிய முயற்சிக்கு உளம் நிறைந்த பாராட்டு.

அன்புடன்,

**சு. செல்லப்பன்**

# காலத்தின் தேவை

**இலக்கிய வல்லுநர் - முனைவர்**
***சகத்ரட்சகன், க. மு.***
நாடாளுமன்ற உறுப்பினர்

தாய்நாட்டு மக்களின் உள்ளுணர்வை ஒழுங்குறக் காட்டுவதுதான் தாய்மொழி. அது பல்லாயிரக்கணக்கான மக்களால் பன்னூற்றாண்டாகக் கையுழைப்பாலும் கருத்துழைப்பாலும் படைக்கப் பட்டது. தமிழே உலகின் முதன்மொழி, இந்திய மொழிகளின் தாய்மொழி; அது வீறியம் மிக்கது ; பன்முக வளங்கொண்டது. கடந்த காலம் நிகழ்காலம் எதிர்காலம் ஆகிய முக் காலத்தையும் வாழ்வின் அனைத்துக் கூறுகளோடும் இணைத்துப் பிணைத்துச் செழித்து வளரக்கூடியது. இலக்கியச் செழுமையும் வரலாற்றுச் சிறப்பும் மிக்கது.

முன்னேறி வரும் இன்றைய சமுதாயத்தில் தனி ஒரு மனிதனோ, நாடோ எண்ணங்களின் வளர்ச்சிக்கும் உணர்ச்சிகளின் பரிமாற்றத்திற்கும் தாய்மொழியைப்போல் ஓர் ஊற்றமான மொழி இருக்க முடியாது.

சமூக வரலாற்றோடும் - பண்பாட்டோடும் தான் ஒரு மொழி வளரும், செழிக்கும். வளமார்ந்த மொழி என்பது, வளமார்ந்த எண்ணங்களால்தான் மெய்ப்பிக்கப்படும். அந்தத் தாய் மொழி மக்கள் வள வாழ்வு வாழ்ந்தால்தான் அது முடியும்.

மேலை நாட்டார்க்கு மொழி என்பது ஒரு கருவி - எண்ணங்களின் ஊர்தி. ஆனால் தமிழர்க்கு அது உயிர்.

தமிழுக்கு அமுதென்று பேர் - அந்தத்
தமிழ் இன்பத் தமிழ் எங்கள் உயிருக்கு நேர் !

° ° °

தமிழ் எங்கள் பிறவிக்குத் தாய் - இன்பத்
தமிழ் எங்கள் வலமிக்க உளமுற்ற தீ !

° ° °

என்று பாவேந்தர் பாரதிதாசனார் தமிழியக்க மாகவே வாழ்ந்தார்.

சங்க காலத்திற்குப பிறகு தமிழச் சமுதாயம் வந்தேறிகளால் - சமயவாணர்களால் - அடுத் தடுத்தப் படையெடுப்புகளால் சீரழிந்தது. ஒரு நாடும் நாட்டு மக்களும் நாகரிகத்தால் - பண் பாட்டால் சீரழிகிறபோது மொழியும் சீரழியும் என்பது வரலாற்றுண்மை.

உலக நாகரிகத்தின் கொடுமுடியில் வாழ்ந்த நாடுகள் சீரழிந்தாலும் மீண்டும் சீர்பெற்றன. அந்தோ! என் தாய்த் தமிழகம் வந்தேறிகளின் வலக்கரத்தினின்றும் இன்றும் மீண்டபாடில்லை.

நெஞ்சில் உரமும் இன்றி, நேர்மைத் திறமும் இன்றி, வஞ்சனையாளரின் வாய்ப்பட்டு வாழ் கின்றனர் தமிழர். திருவள்ளுவனைப் போன்ற தன்னேரில்லாச் சீர்திருத்தவாணன் காலம் முதல் அறிஞர் அண்ணா காலம்வரை இந்த நிலை மாற வில்லை.

பெரியாரின் பெருஞ் சிந்தனையையும் அறிஞர் அண்ணாவின் அருங் கருத்தினையும் ஏற்ற சமுதாயம் ஓரளவு ஆட்சியில் வெற்றி கண்டது. சமூகப் பொருளியலில், வாழ்வியலில், மொழி வழியில் இன்னும் மேம்படவில்லை என்பதை வெட்கத்துடன் ஒப்புக்கொள்ள வேண்டியுள்ளது.

ஓர் இனத்தின் நாகரிகத்தைப் பண்பாட்டை அழிக்க வேண்டுமானால் 'அவ் இனத்தின் மொழி வழக்கிலும் வாழ்விலும் எண்ணத்திலும் பிற மொழியின் தாக்கத்தை - கலப்பை உண்டாக்கி விட்டால் போதும், அவ் இனத்தின் குடும்ப வாழ்வு முதல் அரசியல் வாழ்வுவரை அடியோடு சிதைத்து விடலாம் என்று ஓர் அறிஞன் கூறியுள்ளான்.

அந்த உண்மையைக் காலங் காலமாய்த் தமிழர் கண்டு வருகின்றனர். இடையிடையே தோன்றிய வாழ்வியல் மருத்துவர்கள் மொழிப் பிணிக்கு மருந்தீந்தாலும் - மொழி நலம்பெறச் செய்தாலும், தமிழ்ப்பகை ஈக்களும் கொசுக் களும் சமுதாயச் சாய்க்கடையிலும், மொழி மனையிலும் முற்றும் அகலவில்லை. அரசியல் அறியாமையின் வாய்ப்பிடங்களிலும், தாளிகைகளின் கழிப்பிடங்களிலும், பொருள் விலைப் புல்லர்களின் கல்வித்துறையின் குப்பைத் தொட்டிகளிலும் மொய்த்து நாளும் நாளும் சீர்கேட்டையும் செம்மாப்பையும் எண்ணச் செழுமையையும், அறிவியலின் சீர்த்தியையும் அரசியலின் நேர்மைச் சிறப்பையும் வாழ்வியலையும் நோக்காடடையச் செய்கின்றன.

மறைமலையடிகள், தேவநேயப் பாவாணர், க. ப. மகிழ்னன், வளவன் பாண்டியனார், பாவேந்தர், அவ்வை துரைசாமிப் பிள்ளை,

கா. அப்பாத்துரையார் போன்றோர் மொழிச் செப்பத்திற்கும், செழுமைக்கும் பன்முக மொழி வழி கருத்தூற்றைச் செந்தமிழில் தர முன்னோடி களாயினர். இன்றும் நம்மிடையே ம. இலெ. தங் கப்பா, இரா. இளங்குமரன், இரா. மதிவாணன், கு. பூங்காவனம், தமிழ மல்லன், துரை. மாணிக் கம் போன்ற பல எழுச்சியுற்ற பல திறன்மிக்க அறிஞர்கள் பலர் :

''உணர்ந்திடுக தமிழ்த் தாய்க்கு
வருந்தீமை உனக்குவரும்
தீமை அன்றோ?

பிணிநீக்க எழுந்திரு நீ
இளந்தமிழா, வரிப்புலியே
பிற்றை நாளுக்கு

அணிசெய்யும் இலக்கியம் செய்
அறத்தைச் செய்! விடுதலை கொள்!
அழகு நாட்டில்

பணி செய்வாய் தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும்
பழநாட்டானே'' என்ற குரட்கு

எதிரொலியாய் ஏற்றுச் செய்கின்றனர்.

இந்தச் செந்தமிழ்ப் பணியைப் பலர் உலகை உற்றுப் பார்த்து உண்மை அறிய விரும்பாமல் அழிந்தாலும், நடைமுறைப் படுத்தும் ஆற்றலும் துணிவும் இல்லாமல், காசுக்காகவும் காளாம்பி புகழுக்காகவும் தம்மையே விற்று வாழ்கின்றனர்.

நான் சோவியத்து நாட்டிற்குச் சென்றிருந்த போது பொதுமைப் புரட்சியில் ஒவ்வொரு மொழியின் மேன்மையையும், அதன் முதன்மை

யும் கண்டு வியந்தேன். தொடக்கப் பள்ளி யிலிருந்து பல்கலைப் படிப்பு வரை அவரவர் தாய் மொழியில் கற்றுயர்ந்த மக்களையும் - நம் நாட்டின் நிலைமையையும் நினைத்து வெட்கிப் போனேன்.

உருசிய மொழி பேசும் மக்கள் பெரும் பான்மையாக இருந்தாலும் உருசிய மொழித் திணிப்பு எந்த ஒரு தேசிய இனத்தின் மீதும் இல்லாமையைக் கண்டு வியந்தேன். அதனினும் வியப்பு அறுபதுக்கு மேற்பட்ட எழுத்து வடிவ மற்ற பேச்சு மொழிக்கு இலெனின் முன்னிருந்து அம் மொழிகட்கு எழுத்து வடிவம் தரச் செய்து இன்று அம் மொழியின் பல துறை ஆக்கங்கள் உலகரங்கில் தலை நிமிரவைத்த பெருமையாகும்.

மொழியைத் துல்லியமாய்க் கையாள்வது, தூய்மையுடன் கையாள்வது இலெனினின் தலை யாய கடமையாய் அமைந்திருந்தது. இன்றும் மேலைய ஐரோப்பிய மொழிகளிலேயே கலப் பற்ற மாசற்ற மொழி உருசிய மொழியாகும். அந்த நாட்டின் மொழிக் கொள்கைக்கென ஓர் இலெனினே போதுமானதாயிருந்தது. ஆனால் தமிழகத்தில் அருபெரும் கல்வியாளர்களும், சீர்திருத்தச் செம்மல்களும் தோன்றியும் கொடுந் தமிழும் கலவைத் தமிழுமே அனைத்துத் துறையி லும் மேலோங்கி நிற்கின்றன.

இதனினும் கேடு, ஆங்கில மொழியின் மீது கொண்டுள்ள வெறியுணர்வு பாட மொழியாக இந்தியத் தமிழகத்தில் பேயாட்சி செய்கிறது. சாதியால் மதத்தால் தமிழ் மக்கள் சிதைந்தது போல் ஆங்கில மொழி மூலம் கல்வி கற்றவர்கள் எல்லா நிலையிலும் மேம்பாடு எய்தவும், தாய்

மொழியில் கல்வி பயின்றவர்கள் எல்லா வகையிலும் புறக்கணிக்கப்படுவதும் ஆகிச் சமூகத்தில் இருப்பவன் - இல்லாதவனைப் போல் ஒரு புதிய சாதியையே உண்டாக்கி வருகின்றனர். இந் நிலை உலகில் வேறு எங்கும் காண முடியாத ஒரு நிலை.

எந்த ஒரு மொழியும் மற்றொரு மொழியினர் மீது நேராகவோ மறைவாகவோ திணிக்கப்படும் போது அந்த வல்லதிகாரம் பகைமையை வளர்க்குமே தவிர பண்பாட்டை வளர்க்காது. தாய்மொழிக் கல்வியில் பயின்றால் அல்லது எந்த ஓர் இனமும் தலை தூக்க முடியாது. இதனை எண்ணிப் பார்க்கும் கூரிய சீரிய அறிவு அதிகாரத்தில் இருப்பவர்கட்குச் சிறிதும் இல்லை. இந்தப் போக்கும் நோக்கும் உள்ளதைச் சிதைக்கும் புற்று நோயாகும்.

தாய்மொழிதான் கல்வியிலிருந்து ஆட்சி நிலைவரை அனைத்துத் துறையிலும் முதன்மை பெறவேண்டும் என்று கூறுவது, இருபத்தோராம் நூற்றாண்டில் கூறுவது நகைப்புக்கு இடமான செய்தியாகும். தமிழைப் போன்ற உயிர்ப்புள்ள - வேர்ச்சொல் மிகுந்த புதிய புதிய எண்ணங்கட்கெல்லாம் சொல்லாக்கத் திறனுடைய ஒரு மொழி - உலகின் மூலமொழி மற்ற எந்த ஒரு மொழியின் கீழும் - இரண்டாம் நிலையாக்கப்படுவது ஏற்றுக் கொள்ள முடியாத ஒன்று.

வாழ்வின் எந்த ஒரு நிலையிலும் தன்னலமும், பரந்துபட்ட மக்கட்குரிய செயலார்வமும் மற்ற ஒரு தெளிவற்ற வறட்டுப் பிடிவாதமும் நம் நாட்டின் முன்னேற்றத்தையே பலவகையிலும் கெடுத்து வருகிறது. அதில் மொழி உரிமை

யற்ற வாழ்வும் - பிற மொழித் திணிப்பும் மிகவும் வருந்தத்தக்கது.

உலகின் ஆறில் ஒரு பங்காகிய உருசியாவில் இலென்னினின் மொழிக் கொள்கை வெற்றி பெற்றது. அவருடைய சீர் சார்ந்த கருத்தையொட்டி ஏனைய பொதுமை நாடுகளும் இன்று உலகுக்கு வழிகாட்டி வருகின்றன.

இந்தியாவும் - குறிப்பாக இந்தியத் தமிழகமும் மக்கள் அறிவாற்றலுக்கும், வாழ்க்கை மேம்பாட்டுக்கும் இலெனினின் மொழி பற்றிய கருத்துகளை மேற்கொண்டால் எவ்வளவோ சிக்கல்கள் தீர்ந்து இங்கும் ஒரு புத்துலகம் தோன்றும் - பொதுமை அறம் நிலைக்கும். பல்வேறு நாகரிக-பண்பாட்டு மக்களிடை உயர்வும் ஒற்றுமையும் ஏற்படும்.

*மொழியைப் பற்றி - இலெனின் பல்வேறு காலத்தில் - நிலையில்* எண்ணிச் செயல்படுத்திய கருத்துகளை என் அன்புக்குரிய த. கோவேந்தன் தமிழில் மிக மிகத் தெளிவாகச் சுருக்கித் தந்துள்ளார். இங்குள்ள எழுத்தாளர்கட்கும் - கல்வியாளர்க்கும் - அரசியலீடுபாடு கொண்ட அனைவருக்கும் புத்துணர்ச்சியையும் புத்தெழுச்சியையும் இந்நூல் ஊட்டும் என்பது உறுதி. பாவேந்தரின் தமிழியகத்திற்குப் - பாவேந்தரின் மரபில் வந்தவர் தந்த விளக்கக் கையேடாகும் இது. தமிழர் இந் நூலால் பயன்பெற விரும்புகிறேன்.

''தாய்மொழி நூற்றுக்கு நூறுபெயர் பெறத்
தக்கதோர் கட்டாயம் ஆக்கிவிட்டால்
போய்விடும் கல்லாமை! இங்கதன்பின் - பிற
புன்மொழிகள் வந்து சேரட்டுமே! - **பாரதிதாசன்**



# என்னுரை

உலகின் ஒவ்வொரு மொழியும் ஒவ்வொரு வகையில் சிறப்புடையது. பற்பல சிறப்புகளை யும் ஒருங்கே கொண்ட ஒரு சில மொழிகளில் தமிழ் முதன்மையானது. அனைத்து ஆற்றலை யும் கொண்ட மொழி மட்டுமன்று; கொள்ளும் மொழியும் ஆகும்.

தொல் பழங்கால முதல் அறிவின், ஊடக மாகிக் காலந்தோறும் பல ஏற்ற இறக்கங்களைக் கண்டு, சமுதாயத்தின் விரைவான முன்னேற்றத் திற்கு வழிகாட்டி, வளங்கூட்டிய தமிழ் மொழி, உலக மொழிகட்கெல்லாம் மூல மொழியாகவும் இந்திய மொழிகட்குத் தாய் மொழியாகவும் விளங்குவது.

மற்ற மொழிகளுடன் ஒப்பிடும்போது தமிழ் மொழி தனித் தன்மையுடன் சிறந்து செழித்து விளங்குவது. ஆனால், அதனை அழிக்கவும் ஒழிக்கவும் எழுத்தாளர் என்று தம்பட்டம் அடித்துக் கொள்பவர்களும், எல்லாம் வலலவராக அரசதிகாரத்திலே ஏறியவர்களும் தம்தம் முயற்சி களை - அறிந்தும் அறியாமையாலும் செய்து வருகின்றனர்.

ஆக்கப்பணி செய்யத் தெரியாதவர்களிடம் கருவி கிடைத்தால், கருவியையும் பாழ்செய்து கண்டதையும் பாழ் செய்வதைப் போல இன்று மொழி இருவகைக் கொடுங்கோலர்களால் இடர் படுகின்றது.

இதே நிலை உருசிய நாட்டிலும் புரட்சிக்கு முன்பும் பின்பும் ஏற்பட்டது. ஆனால் அங்குக் கல்வி, கேள்வி, ஒழுக்கம், பண்பு ஆகிய நிலைகளில் மேம்பட்ட மாந்தநல நாட்டமுடைய இலெனின் தோன்றினார். மாந்த இனமேன்மைக்கு மார்க்சு-ஏங்கெல்சு வழி பொதுவுடைமைப் புரட்சியை உலகில் உண்டாக்கினார். அதனால் அனைத்து வகையிலும் மனத் தூய்மையே செய்வினைத் தூய்மை ஆயிற்று.

'அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மை'யின் சால்பினராய்த் 'துஞ்சாக் கொள்கையராய், அறிந்தோர் புகழும் ஆண்மையராய்ச், செறிந்த நூல்வழிப் பிழையா நுணங்கு நுண் தேர்ச்சி'யுடன் உலகு காப்பவராய் உயர்ந்த இலெனின் மொழிக் காப்பவராயும் இருந்தார்.

புரட்சிப் பாவலன் பூட்கினால் உயிர் பெற்ற உருசிய மொழி, உலக மொழிகளில் சிறப்பிடம் பெறாத ஒன்றாகவே இருந்தது. உலகிலேயே புதுமலர்ச்சியை உண்டாக்கிய அக்டோபர் புரட்சியின் ஆணிவேராக விளங்கிய இலெனின், உருசிய மொழியை உலகின் தலைசிறந்த மொழிகளுள் ஒன்றாக முப்பதாண்டு கால உழைப்பால், பேச்சால் எழுத்தால் உயர்த்திவிட்டார். அவரின் மொழி வளர்ச்சி ஆக்கத் திட்டங்கட்கு அவர்தம் தோழர்களும் ஒத்துழைத்தனர்.

"விழிப்போரே நிலைகாண்பார் !
விதைப்போரே அறுத்திடுவார்
களைகாண் தோறும்
அழிப்போரே அறம்செய்வார் !
அறிந்தோரே உயர்ந்திடுவார்" - என்ற

பாவேந்தர் மொழிக் கொப்ப உருசிய மொழியினர்

இன்று சோவியத்து மக்களாக உயர்ந்துள்ளனர். 'உருசிய மொழியே இலெனினின் மொழி' என்னும் மொழி உயர்வு நவிற்சியன்று.

உருசிய மொழியின் உயர்வுக்கும் வளத்திற்கும் செம்மைக்கும் செழுமைக்கும் உழைத்த இலெனின், ஒலியால் மட்டும் உயிர் வாழ்ந்து கொண்டிருந்த சோவியத்தின் பற்பல மொழிகட்கு உருவடிவம் தந்து, வாயும் செவியும் மட்டுமே இருந்தவர்கட்குக் கண்ணையும் தந்து கருத்தூற்றை மலையூற்றாய்ப் பெருக்கெடுக்கச் செய்தார். அதற்காக எந்த ஒரு மொழியினர் மீதும் தம் தாய் மொழியாகிய உருசிய மொழியைத் திணிக்கவில்லை - திணிக்கவிடவும் இல்லை.

இன்றும், உருசிய சோவியத்துச் சமன்மைக் கூட்டுக் குடியரசு நிலப்பரப்பைத் தவிர, மற்ற இருபது தன்னாட்சிக் குடியரசுகளிலும், எட்டுத் தன்னாட்சிப் பகுதியிலும், பத்துத் தன்னாட்சிப் புற எல்லையிலும் அந்தந்த மாநில மொழிகளே கல்வி மொழியாகவும் ஆட்சி மொழியாகவும் சிறக்கின்றன.

உலகின் மாபெரும் பொதுமை வல்லரசான சோவியத்தில் ஒவ்வோர் இனமக்களின் மொழியையும் பண்பாட்டையும் நாகரிகத்தையும் தனித் தனிச் சிறப்புடன் ஒரு காவனத்தில் பல்வேறு மண மலர்களையும் கனி மரங்களையும் வளர்ப்பதைப்போல் வளர்க்கின்றனர்.

சோவியத்து நாட்டுடன் நட்புறவு கொண்டு சென்று திரும்பும் எழுத்தாளர்கள் முதல் அரசியல் தலைவர்கள் வரை இந்த உண்மையை அறிந்து வந்ததற்கான சான்று ஒரு கடுகளவும் இங்கே காண முடியவில்லை.

இலெனின்

உலகைக் குலுக்கிய புரட்சியை உண்டாக்கிய இலெனின் பல்வேறு நேரங்களில் எழுதிய-பேசிய மொழி பற்றிய கருத்துகளைத் தொகுத்து 'மொழியைப் பற்றி இலெனின்' என்ற ஒரு நூலை ஆங்கிலப்படுத்தி மாசுகோ 'வானவில் பதிப்பகம்' வெளியிட்டுள்ளது. மொழிச் சிக்கலில் விழிபபுணர்வற்ற-தெளிவற்றவர்க்குப் பயன்பட அந் நூலைச் சுருக்கித் தந்துள்ளேன்.

என் எழுத்திலும் வாழ்விலும் அக்கறையும் ஆர்வமும் காட்டிப் பாராட்டுரையும், சிறப்புரையும் தந்த முனைவர் சிலம்பொலி செல்லப்பனார்க்கும், முனைவர், நாடாளுமன்ற உறுப்பினர் சகத் ரட்சகன் அவர்கட்கும் மிக்க நன்றி!

இந் நூல் 'காலத்தின் தேவை' என்று வற் புறுத்திய என் இளைய தோழர் இரா. வேங்கடா சலபதிக்கும், மொழிநூலின் சிக்கறுத்துத் தந்த நயன்மைக் கட்சியின் கலைக் களஞ்சியமாகிய அறிஞர் எ. எசு. வேணு அவர்கட்கும் நன்றி மிகவுடையேன்.

மக்கள் பயன் கொள்க.

தோழன்

**த. கோவேந்தன்**

# காற்றை விதைத்துப் புயலை அறுக்காதீர்

## பாவேந்தர்

எங்களின் வாழ்வும் எங்களின் வளமும்
எங்கள் தாய்மொழி இன்தமிழ்ச் செல்வமே!

தமிழ் எங்கள்உயிர், தமிழ் எங்கள்உடல்
தமிழ் வாழ்வதனால் யாம் வாழ்கின்றோம்!
தமிழ் எம் உணர்வு ! தமிழ் எம் உணர்ச்சி !

உண்ணும் உணவும் பருகும் நீரும்
தமிழே ! தமிழே, சாவா மருந்து !
தேனின் இனிமை ! செழுமலரின் மணம் !

தமிழ்தான்
எங்களின் கூர்வாள், எங்களின் கேடயம்,
எஃகில் காணா வலிமையின் இருப்பு !
நீரின் தெளிவு ! நெருப்பின் சுடர்தீ !

காலப் பழமையால் வைரம் பாய்ந்தது !
நாகரிகத்தின் நாற்றங் காலது !
எம்மொழிக்கும் அது ஈடிணையற்ற
செம்மொழி ! உலகச் சிந்தனைக்கெல்லாம்
ஊற்றாய்த் துலங்கும் உண்மையின் பைஞ்சுனை !

அதனில் இந்தி நஞ்சைக் கலப்பது
பொதுமை நோக்கிப் புதுமைக்கேகும்
மக்களை மாய்க்கும் மடச்செயல் ஆகும்.
சிக்கல் நெருப்பில் எண்ணெய்யைச் சேர்ப்பதா ?
தீமையின் விளைவு தீமையே,
காற்றை விதைத்துப் புயல்அறுக்காதீர் !

# முன்னீடு

இலெனின் !

இந்த நான்கு எழுத்துப் பெயர் மனித சமுதாயம் என்றும் மறக்க முடியாத பெயர். அவர் உருசியாவிற்கு மட்டுமல்லாமல் உலகத்திற்கே வழிகாட்டியாகத் திகழ்பவர் ! ஏன் பிறந்தோம் - எப்படி வாழ்வோம் - இருப்பதைவிட சாவதே மேல் என்று ஏக்கத்தில் இருந்த மக்களுக்கு வழிகாட்டித், தலைமை ஏற்றுத், தன்னலமற்ற தொண்டு புரிந்து எல்லோருக்கும் புதுவாழ்வு தேடித் தந்தவர் இலெனின். அவர் எந்த அளவிற்கு 'மொழி' யைப்பற்றிச் சிந்தித்துத் தெளிவான கருத்துகளைத் தெரிவித் திருக்கிறார் என்பதை அவர் பேச்சு - எழுத்துத் தொகுப்பு நூல் களிலிருந்து அறிய முடிகிறது.

மொழியின் சிறப்பையும், மொழியின் வளர்ச்சியையும், மொழிக்கும் சிந்தனைக்கும் உள்ள தொடர்பையும், அரசியல் போராட்டத்திற்கும் மொழிக்கும் உள்ள ஈடுபாட்டையும் பல நூல்களில் இலெனின் தெளிவுபடுத்திருக்கிறார்.

உலகில் புதிது புதிதாக மலரும் நல்ல வல்ல கருத்துகளைக் கண்டறிய, மொழி அறிவு வேண்டும். மேலும் உலகில் உள்ள மொழிகளைக் கற்பதன் மூலமே, நல்ல சிந்தனை ஆற்றலைப் பெற்றிட இயலும். மெய்மையியத்தோடு உரையாடும் திறமையையும் மொழி அறிவை வளர்த்துக் கொள்வதன் மூலமே பெற்றிட முடியும்.

இலெனின் பல்வேறு வளமான உலக மொழிகளைக் கற்றவர். அவர் கிரேக்க மொழி பயின்றார். அதன் மூலம் பெற்ற அறிவைப் பயன் படுத்தினார். இலெனின் புரட்சிப் பாதையைக் கொண்ட நேரத்தில், செருமன், பிரெஞ்சு, ஆங்கிலம் ஆகிய மொழி பற்பலவற்றைக் கற்று, ஐரோப்பிய நாடுகளில் நடை பெற்ற உழைக்கும் வகுப்பினர் போராட்டங்களைப்பற்றி தெரிந்து கொண்டார்.

உக்ரேனியன், போலிசு, பல்கேரியன் என அவர் கற்ற மொழி கள் பல; அதனால் அவர் அறிவு வளமானது. அதன் விளைவாக அவரின் சிந்தனை ஆற்றல் உயர்நிலை பெற்றது.

எழுதப் படிக்க நான்கு எழுத்துகள் தெரிந்தால் போதும் என்று கூறும் பெற்றோர்கள் !

பள்ளியில் பத்துப் பாடங்கள் படித்து விட்டதாலேயே தம்மைப் படிப்பாளியாகக் கருதிக்கொள்ளும் இளைஞர்கள் !

வேலையில் சேர்ந்து விட்டால் எதையும் ஏன் படிக்க வேண்டும் என்று வினவும் பேராசிரியர்கள் !

உண்பதும், உறங்குவதும், பொருள் சேர்த்து வாழ்வதே பொதுத் தொண்டு என்று நினைப்பவர்கள் !

இப்படிப் பலவகையான மனிதர்களைப் பார்க்கும் நாம், சார் மன்னனை எதிர்த்துப் பரந்த உருசிய நாட்டில், புரட்சிக்குத் தலைமை ஏற்ற இலெனினுக்குப் பல மொழிகளைக் கற்கவும், உலக அறிவைக் கொள்முதல் செய்து கொள்ளவும் எப்படி முடிந்தது என்று நினைக்கும் போது எவருக்குமே வியப்பு ஏற்படாமல் இருக்க முடியாது.

உருசிய மொழி ஒரு சிறந்த இலக்கிய மொழியாக வளர்ச்சிப் பெற்றதற்கு இலெனின் எழுத்துகளும் ஓர் அடிப்படையாகும். 19ஆம் நூற்றுண்டின் தொடக்க காலத்தில் உருசிய மொழியை இலெனின் விளம்பரத்திற்கும், கொள்கைப் பரப்பிற்கும் பயன்படுத்தினார். அந்த மொழியிலேயே அறிவியல் பொது உடைமைக் கோட்பாடுகளையும், அரசியல் பொருளாதாரக் கோட்பாடுகளையும், மனித வாழ்வைப் பற்றிய சிக்கல்களையும் தெளிவாக எடுத்துக் கூறினார்.

இதற்குரிய காரணம், இலெனின் ஆசிய மொழிகளையும், ஐரோப்பிய மொழிகளையும் நன்கு ஆய்ந்து அறிந்ததேயாகும். மேலும் அவர் பள்ளி மாணவனாக இருந்தபோதே பாடங்களில் மிகு அக்கறை செலுத்துவதைவிட, மொழியைப் பற்றி அதிக அக்கறை கொண்டிருந்தார் என்று அவரின் தங்கை திருவாட்டி அன்னா கூறி இருப்பதில் இருந்து நாம் தெரிந்து கொள்ளலாம்.

மேடைப் பேச்சுக்கும், கொள்கைப்பரப்பிற்கும் ஏற்ற முறையில் மொழி அமைய வேண்டும் என்று இலெனின் விரும்பினார். வெற்றாரவாரச் சொற்களில் அவருக்கு வெறுப்பு. காரணம் அதனால் உருப்படியான பலன் ஏற்படாது என்று கருதினார்.

## 100

**ஸுல்பிய** உஸ்பெகிஸ்தான்

(பி. 1915)

## முடிவற்று அலைந்திடும் உள்ளம்

நிலத்தூடும், கடலூடும், வானூடும் பயணங்கள்
நிகழ்த்து கின்றேன்;
பலவான சிற்றூர்கள், நகரங்கள், நாடெல்லாம்
பறந்தும் உள்ளேன்;
நிலவுலகம் பலவண்ணத் திண்டாகப் புதிர்வழியாய்க்
கிடக்கும், எங்கும்
கலத்துறைகள் வாழ்மனைகள், எண்ணங்கள், கனவார்வம்
பொலிந்து நிற்கும்.

எங்கெங்கு நான்செலினும் கனவோடே உடன்கொள்வேன்
பாட்டை, அன்பை.
இங்கிந்த உலகந்தான் ஓய்வில்லாது இயங்குதல்போல்
இயங்கு கின்றேன்.
கங்குல்துயில் கனவினிலும் என்பயணம் மேன்மேலும்
தொடர்ந்தே செல்லும்,
செங்கதிர்ப்புத் தொளிநோக்கிச் செல்கின்ற நாவாய்என்
படுக்கை ஆகும்.

மொழிச் சொற்களஞ்சியம் உருவாக்கப்பட வேண்டும் என்பதற் காகப் பலரை ஊக்குவித்துத் தாமே அதில் முழு அக்கறை காட்டி ஒரு நல்ல சொற்களஞ்சியம் வெளிவரக் காரணமாக இருந்தார் இலெனின். மொழியின் ஆற்றலைக் கொண்டு கிளர்ச்சிகளுக்கும், கொள்கைப்பரப்பிற்கும் முழு வலிமையை உண்டாக்கியவர் இலெனின்.

கட்டுரைகளிலும், வெளிவரும் ஏடுகளிலும், நூல்களிலும், அறிக்கைகளிலும் ஒரு சிறு இலக்கணப் பிழைகூட ஏற்படக் கூடாது என்பதில் இலெனின் தீவிரமாக ஈடுபட்டார். தம் முடைய பேச்சிலும், எழுத்திலும் எந்தக் குற்றம் குறையே இல்லாத அளவிற்குத் தாமே முன் எச்சரிக்கையுடன், பிறருக்கு நல்ல எடுத்துக்காட்டாய் விளங்கினார்.

மேடை மீது பலர் முன் நின்று பேசுபவர்களுக்குத் தாம் விரும்பும் குணங்கள், அதற்கான திறமையும் தகுதியும் எந்த அளவிற்கு இருக்கின்றன என்பதைக் கண்டறிந்து, மொழி அறிவு நிரம்பியவர்களையே இலெனின் தேர்ந்தெடுத்தார். அவர் உண்மையான மக்களின் தலைவராகத் திகழ அவரது பேச்சாற்றல் துணைபுரிந்தது. அதுமட்டுமல்ல, சமுதாயத்தைப் புரட்சிப் பாதைக்குச் செம்மைப்படுத்த வளமான மொழி அறி வும்,கருத்தாற்றலும், பேச்சாற்றலும் அவருக்குத் தேவைக்கு மேலாக இருந்த காரணத்தினால் மக்களைத் தட்டி எழுப்பிவிட அவரால் முடிந்தது. இதற்கு முன், வேறு எவரும் அந்த அளவிற்குச் செயல் புரிந்ததாக வரலாறு இல்லை. அவை யகத்து அஞ்சாத சொல் திறமையில் அவர் வல்லவர். எதிரி களை எளிதில் வெல்லக்கூடிய அளவிற்கு அவரின் மொழி - நடை அமைந்திருந்தது. பேசியதையே மீண்டும் மீண்டும் பேசுவதை அவர் வெறுத்தார். ஒரே நடையில் எதையும் பேச வும் அவர் முற்பட்டதில்லை. எதை எப்படி எவ்வாறு கூறினால், கேட்பவர் மனத்தில் பதியும் என்பதை உணர்ந்து பேசிய மிகச் சிறந்த புரட்சிப் பேச்சாளர் இலெனின்.

அசைக்க முடியாத அளவிற்கு, வரம்புக்கு மீறிய அதிகார வன்மை பெற்றவர்களை அசைத்து, ஆட்டம் கொள்ளச்

செய்து, வீழ்த்தியதற்கு - அவர் பயன்படுத்திய பெரிய படைக் கலங்கள் - அவரின் நாவன்மையும், எழுத்து வன்மையும்தாம்.
அவர் வாழ்ந்த வாழ்வு மதிப்புக்குரியது. பல அரிய உண்மை களை, வினைப்பாடுகளைக் கண்டு நாம் பெரும்பயன் பெற்றிட வேண்டும்.
குறிப்பாக அவர் உருசிய மொழி வளர்ச்சிக்கும், அதன் மேன் மைக்கும், வளத்திற்கும் ஆற்றியுள்ள அரும்பணி ஈடு இணை இல்லாதது.
தாய்மொழிப் பற்று நாளுக்கு நாள் குறைந்து வருவது கண்டும் கவலைப்படாத மக்களுக்கும், பிற மொழி மீது போலி வேட்கை கொண்டு கெட்டு வரும் மக்களுக்கும், அடிமை நிலைக் காரண மாக வேற்று மொழி திணிக்கப்பட்டுத் தாய்மொழியைக் காத் திடத் தவிக்கும் மக்களுக்கும், ஆதிக்கவாணர்களின் மொழி திணிக்கப்படுவதைக் கண்டித்துத் தாய்மொழியைக் காத்திடத் தவிக்கும் மக்களுக்கும், பேரறிஞர் இலெனின் வழிகாட்டி யாவார். எழுத்தாளர்களும், பேச்சாளர்களும், தங்கள்தங்கள் பொறுப்பை நன்கு உணர அவரின் மொழி இயல் செயற் பாடுகள் முன்னோட்டமாய் அமைந்துள்ளன. எந்த மொழியில் பேசினால் என்ன, எந்தச் சொற்களைப் பயன்படுத்தினால் என்ன, மக்களின் கைத்தட்டல் கிடைத்தால் போதும் என்று வாய்ப்பந்தல் போட்டு வாழ்பவர்களுக்கும், எப்படி எழுதினால் என்ன - பணமும், பெயரும் கிடைத்தால் போதும் என்று கருதும் எழுத்தாளர்களுக்கும், வழிகாட்டியாக அமைந்துள்ளன இலெனினின் மொழிப்பற்றும் தொண்டும்.



## மொழியும் எண்ணமும்

"மனித சமுதாயம் கூடிவாழ மொழி மிகவும் இன்றியமையாத தாகும். தங்கு தடை ஏதும் இல்லாமல் வளர்க்கப்பட்ட மொழி யும், ஒற்றுமையும் இருப்பதன் மூலம்தான் உண்மையான வாணிபம் பெரிய அளவில் செய்திட, இன்றைய முதலாளிய உலகில் முடியும். பல்வேறு வகுப்புகளாக மக்கள் பிரிந்து உரிமையுடன் வாழ மொழி வளர்ச்சி தவிர்க்க முடியாதது. விற்ப வர்களுக்கும் பொருள் வாங்குபவர்களுக்கும் மொழியே சீரான தொடர்பை உண்டாக்குகிறது. பெரிய உடைமை உரிமை யாளர்களுக்கும் சிறிய உடைமையாளர்களுக்கும் நல்லுறவை உண்டாக்குவதும் மொழியே. மொத்தத்தில் வாணிபங்களின் நல் இயக்கத்திற்கு மொழி வளர்ச்சி இன்றியமையாதது.

எனவே, தேசிய மாநிலங்களை அமைவதற்குப் பாடுபடும் ஒவ்வொரு தேசிய இயக்கமும் இந்த அடிப்படை மூலமே இன்றைய முதலாளியச் சூழலில் பாடுபட வேண்டி இருக்கிறது. மொழி வளர்ச்சி பெறாத நிலையில் அந்தக் குறிக்கோளைத் தேசிய இயக்கங்கள் அடைந்திட இயலாது" எனத் தன்னாட்சி உரிமை கோரும் இனங்களின் உரிமையைக் குறித்து இலெனின் கூறியிருக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது. மனித வாழ்விற்கு மொழி எந்த அளவிற்கு இன்றியமையாதது என்பதை இலெனின் வாழ்க்கையில் இருந்து அறிகிறோம்.



"அறிவியலின் ஒவ்வொரு துறையிலும் அறிவின் கோட் பாடுகளை, நாம் வட்டார மொழி வழக்கில் நோக்கவேண்டும். நம் அறிவு எப்போதும் ஆயத்த நிலையில் இருப்பதாகக் கொள்ளக்கூடாது. நம் அறிவை முழுமையானதாக நினைக் கக் கூடாது. அதில் எவ்வித மாற்றத்திற்கும் இடமில்லை என்றும் நினைக்கக் கூடாது.

அறியாமை நிலையில் இருந்துதான் அறிவு வளர்கிறது என்பதை மறக்கவே கூடாது. அறிவு வளர வளர நாம் ஏற்கனவே பெற்ற அறிவு போதுமானதில்லை, சரியான

தில்லை என்பதை நாமே உணர்கிறோம்'' என்றும் இலெனின் குறிப்பிடுகிறார்.



''மனிதனின் அறிவையும், உள்ளத்தின் உறுதியையும் ஒன்ருக ஒரு பக்கம் மதித்து, இயற்கையின் இன்றியமை யாண்மையை மற்றொரு பக்கம் எடுத்துக்கொண்டு தெளிவான விளக்கங்கள் தராமலே, இயற்கைக்கு முதலிடமும், மனிதனின் அறிவிற்கும் உறுதிக்கும் இரண்டாவது இடமும் தருகிறார் ஏங்கில்சு.

ஆனால், மாந்தரின் அறிவும், உள்ளத்தின் உறுதியும், இயற்கைக்குக் கட்டுப்பட்டே அமைந்திட வேண்டியதைத் தவிர வேறு வழி இல்லை'', என்று இலெனின் உலகியம் பற்றி கூறும்போது தெளிவாக ஏங்கில்சு கருத்தை விரிவாக விளக்கம் கூறித் தெளிவுபடுத்துகிறார் இலெனின்.



எண்ணங்கள் - பொருள்கள் இரண்டும் உண்மையானவை. ஏன் என்ருல் அவை இரண்டும் காணக்கூடியவை. ஆனால் எண்ணங்கள்தாம் பொருள்கள் என்று கருதுவது தவறானது. அப்படித் தவறான கண்ணோட்டம் கொள்வதால் குழப்பம் உண்டாகும். குறிக்கோள்களுக்கும், உலகியலுக்கும் உள்ள உண்மையான குணங்களைப் புரிந்துக்கொள்ள இயலாது போகும்,

மாந்தரின் நினைவுகளும் - பொருள்களும் காணக்கூடியன வாக உள்ளன என்று தையட்சின் சரியாகவே ஓர் இடத்தில் தெளிவுபடுத்தி யிருக்கிறார். '' எண்ணுவது உடலின் வேலை - எண்ணுவதற்கு ஒரு பொருள் இருந்தாக வேண்டும். அந்தப் பொருள் சிந்தனைக்குக் கருவியாகப் பயன்பட வேண்டும். அப்படிப்பட்ட பொருள்களை நமக்கு வாழ்க்கையிலும், இயற்கையிலும்தான் கிடைக்கின்றன. சிந்தனை மூலம் கிடைப்பது பொருள். அந்தப் பொருளுக்கு அப்பால் எதையும் காண இயலாது. எனவே, மேற்கொண்டு அந்தப் பொருளைப் பற்றிச் சிந்திக்கவும் இயலாது. ஒரு பொருளைக் காணும்போது தான் அது சிந்தனைக்குக் கருவியாகிறது. ஆனால் பொருள்

சிந்தனைக்கும் மேலானது'' என்று தையட்சன் கூறு கிறார்.

ஒன்றை நேரில் கண்டால்தான் சிந்திக்க முடியும் - காணாததைச் சிந்திக்க இயலாது என்பதையும் - உலகில் உண்மையாக இருப்பவற்றைப் பற்றிதான் மனிதன் சிந்திக்க முடியும் என்பதையும் இலெனின் எழுதிய உலகியம் நூலில் தெளிவாக்கி யிருக்கிறார்.



''ஒரு பொருள் மறைகிறது, காண முடியாததாகிறது. என்றால், அந்தப் பொருளை இதுவரை நாம் சிந்தித்து வந்த நிலைக்கு வரையறை ஏற்பட்டு விட்டது என்று பொருள். ஆனால், நாம் மேலும் அந்தப் பொருளைப் பற்றி ஆழமாகச் சிந்திக்கவும், அதன் குணங்களை ஆராயவும் முற்படுகிறோம் என்பதுதான் உண்மை. ஒரு காலத்தில் கண் எதிரில் காணப் பட்டதும், மாற்றம் கொள்ளாத நிலையில் இருந்ததும், இப்போது மறைந்துவிட்டதற்கான காரணங்களைக் கண்டறி யும்போது, அந்தப் பொருள் எத்தன்மை வாய்ந்தது என்பதை அறிந்து பல உண்மைகளை நாம் அறிந்துகொள்கிறோம். அந்த அறிவைக்கொண்டு மேலும் பல புதுப் பொருள்களைத் தெரிந்துகொள்ள முடிகிறது. இதே அடிப்படையில் ஆராயும் போது மெய்பொருள் உண்மைகள் எல்லாம் மனித சிந்தனைக்கு அப்பாற்பட்டே இருக்கும் நிலையைக் காண்கிறோம்''

இப்படி இலெனின் பொருள்களுக்கு அழியும் தன்மையும், மறையும் தன்மையும் உள்ளதைத் தெளிவாக்குகிறார். சிந்திக்கும் ஆற்றலுக்கு உரிய தனித்தன்மையையும் கூறி இருக்கிறார்.



''ஒரு குவளை, வெறும் கண்ணாடி உருளை மட்டுமில்லல. அது தண்ணீர் குடிக்கும் ஏனமும் கூட. அந்தக் குவளை வேறு வகையிலும் பயன்படும். ஒரு குவளை என்பது நிறைபொருள் அதனைத் தாக்குவதற்கும் ஏவலாம். அதனை மேசை மீதுள்ள தாள்கள் நகராமல் இருக்கவும் பயன்படுத்தலாம். பட்டாம் பூச்சியைப் பிடித்து வைக்கவும் பயன்படுத்தலாம். அதன் மீது

கைத்திறன் மூலம் வடிவம் செதுக்கப்பட்டோ, வரையப்பட்டோ இருக்கும் ஓவியங்களுக்காகவும் பாதுகாக்கப்பட வேண்டியதாகவும் இருக்கக்கூடும். இதெல்லாம் அந்தக் குவளையைத் தண்ணீர் குடிக்கலாமா கூடாதா என்று முடிவு செய்வதற்காக அல்ல. எனக்கு இப்பொழுது தண்ணீர் குடிக்க ஒரு குவளை வேண்டும் என்றால் அது கண்ணாடியால் செய்யப்பட்டதா, உருளையாக இருக்கிறதா, பூ வேலை செய்யப்பட்டிருக்கிறதா என்பதில்லை. அந்தக் குவளையின் அடிப்பக்கத்தில் ஓட்டை இருக்கிறதா, அதனைப் பயன்படுத்தும்போது உதடுகளுக்குச் சிராய்ப்பு ஏற்படுமா என்பதைத்தான் கவனிப்பேன். தண்ணீர் குடிப்பதற்காக இல்லை என்றால், குவளை எப்படியிருந்தாலும் கவலைப்பட வேண்டியதில்லை.

பள்ளிகளில் பயிலும் போது கற்பிக்கப்படும் பொருள்கள் எவரும் புரிந்து கொள்ள மட்டுமே கூறப்படுகின்றன. ஆனால் பலவேறு பொருள் விளக்கங்களை அறியும் போது, அவை அந்தப் பொருளின் வகை வகையான பண்புகளைக் காட்டுவனவாக அமைகின்றன.

குறிப்பிட்ட வட்டாரத்தில் வழங்கப்படும் மொழியில் பொருள்களின் விளக்கத்தோடு நிற்காமல், மேலும் உள்ள வகை வகையான பொருள் விளக்கங்களையும் ஆராய்வதன் மூலமே அந்தப் பொருளைப்பற்றி முழுமையான தெளிந்த அறிவைப் பெற்றிட முடியும்.

எது சரி, எது உண்மை என்பதைக் கண்டறிய, நாம் மேலும் தீவிரமாக ஆராய வேண்டும். அதற்கு முதலில் நாம் அந்தப் பொருளுக்கு வட்டார மொழிகளில் வழங்கிவரும் பல்வேறு விளக்கங்களையும், அந்தப் பொருளின் பண்புகளையும், அந்தப் பொருளுக்கு உரிய உறவுகளையும், அந்தப் பொருளின் பயன்களையும் நாம் கண்டறிய வேண்டும். இது எளிய பணியன்று, நாம் இதை முழுமையாகச் செய்திட இயலாது போகலாம். இருப்பினும் விரிவாக, விளக்கமாகப் பலவற்றை ஆராய்ந்து தெரிந்து கொள்வதன் மூலம் தவறுகளை நேரிடாமல் தடுத்துக் கொள்ளலாம்.

இரண்டாவதாக அந்தக் குறிப்பிட்ட பொருளின் மாற்றங்களையும், வளர்ச்சியையும், இயங்கும் தன்மையையும் தெரிந்து கொள்ள வேண்டும். இதனை நாம் உடனே கண்டு பிடித்து விட முடியாது. காலப்போக்கில் தான் அதனை அறிய முடியும். அந்தப் பொருள் ஏன் கண்டு பிடிக்கப்பட்டது. அது எதற்கெல்லாம் பயன் படுத்தப் படுகிறது; வேறு எதனுடன் அது தொடர்பு கொண்டுள்ளது என்பதை அறிந்து கொள்வதுவும் இன்றியமையாதது., அதற்கு உலக அறிவு வேண்டும்.

மூன்றாவதாக அந்தப் பொருளுக்கான முழு விளக்கம்பெற மாந்தனின் பட்டறிவு பெருகி இருக்கவேண்டும். அப்போதுதான் அந்தப் பொருளின் முழு உண்மை வெளிப்படும். அதிலிருந்து மக்களின் தேவைகளையும் அறியலாம்.

நான்காவதாக அறியவேண்டியது—இப்படி அந்தந்த மாநில மொழிகளில் உண்மைகளைக் கண்டறிவதன்மூலம் உணரும் உண்மை உறுதியானது. அது ஒருபோதும் புரிந்து கொள்ள முடியாததாகவோ, உறுதியற்றதாகவோ இருக்க முடியாது.'' என்று இலெனின் உண்மைகளை எப்படிக் கண்டறிவது என்பதை அறிவியல் அடிப்படையில் மொழியில் காணலாம் என்பதைக் குறிப்பிட்டிருக்கிறார்.

எந்த உண்மையையும் முழுமையாக ஆராய்ந்த பின்னரே நம்ப வேண்டும் என்பதையும் அறிவு வளர்ச்சிக்குக் கடைப்பிடிக்க வேண்டிய வழிமுறைகளைச் சீராகத், தெளிவாக வகுத்துத் தந்துள்ளார் இலெனின்.

'' **தன்னுரிமை** (சுவபோதா - உருசியாவிலிருந்து சுவட்சர் லாந்து நாட்டில் குடியேறியவர்களால் நடத்தப்பட்ட ஏடு) ஒரு பயனும் அற்ற கந்தல். அதன் ஆசிரியர் எழுதுவதைப் படிப்பவர் களுக்கு இந்த எண்ணம்தான் ஏற்படுகிறது. தொழிலாளரின் நலனுக்காக அந்த ஏடு வெளியிடப்படுவதாகவும், தான் ஒருவனே முதல் பக்கத்தில் இருந்து கடை பக்கம் வரை எழுதுவ தாகவும் தொழிலாளர் பற்றித் தான் நல்ல முறையில் விளம்பரப் படுத்துவதாகவும், அதன் ஆசிரியர் கூறிக் கொள்கிறார். ஆனால் நாம் இங்கே காண்பது என்ன? தொழிலாளர்களுக்கு நல்ல விளம்பரம் கிடைப்பதற்கு மாறாகத், தொழிலாளர்களை மிகவும் இழிவாகக் கருதும் நிலைதான் ஏற்பட்டு வந்திருக் கிறது.

'' எதையுமே ஒரே ஓர் எளிய சொல்லில் புரிந்து கொள்ளக் கூடிய முறையில் எழுதுவதில்லை. உவமைகள் மிகுதியாகவும், கவர்ச்சியான சொற்கள் மூலம் எழுதப்பட்டிருக்கின்றது.

நைந்த பழைய சமன்மைக் கருத்துகளை-அரைத்த மாவையே அரைப்பதுபோல், மிகவும் அருவருப்பான மொழியில் எழுதி யிருக்கிறார். புத்தாய்வுகளும், புதிய எடுத்துக்காட்டுகளும் கொச்சையாக இருக்கின்றன. இதற்கும் முறையாக விளம்பரப் படுத்துவதற்கும் வெகு தொலைவு.

அந்த ஆசிரியர் வாசகர் கவனத்திற்குப் பல்வேறு சிக்கல்களை எடுத்துவைத்து, ஏற்கனவே எல்லோரும் அறிந்த உண்மைகளை மேலும் ஆராயத் தூண்டும் வகையில் தம் கருத்துகளை அமைத்திருக்கிறார். ஆனால், அவர் ஆய்வின் முடிவுகளை வாசகர்களே கண்டுகொள்ள விட்டுவிடுகிறார். அவர் சிந்திக்க இயலாதவர்களையோ, சிந்திக்க மறுப்பவர்கள் பற்றியோ கவலைப்படவில்லை. அப்படிப்பட்டவர்கள் கூட ஆராய்ச்சியில்

ஈடுபடவும், மேலும் சிந்திக்கவும் முற்படுவார்கள் என்ற நம்பிக்கையிலேயே எழுதியிருக்கிறார். மிகவும் இன்றியமையாத இடரான வேலையைச் செய்ய வாசகர்களைத் தூண்டுகிறார். அதற்கு வேண்டிய முதல் உதவியை மட்டும் செய்துவிட்டு, தொடர்ந்து தாங்களே தனியாக முயற்சிகளில் ஈடுபட்டுத் தெரிந்துகொள்ள பயிற்சி தருகிறார்.''

இப்படி இலெனின் எழுத்தாளர்களின் கடமையைப் பற்றியும், ஏடுகள் நடத்துவோர், எண்ணத்தின் பளிங்கென, வாசகரின் கையேடாக இயங்கவேண்டும் என்றும் தெள்ளத் தெளிவாக விளக்குகிறார்.

நல்லதைச் செய்வதில் ஈடுபட்டு விட்டால் மட்டும் போதாது, அதைப் பொறுப்பு உணர்ச்சியுடன் செப்பமான மொழியில் சொல்லவேண்டும் என எழுத்தாளருக்கு எச்சரிக்கை விடுத்திருக்கிறார்.

ஒருவாறு எழுத்துகளைப் படிப்பவர்கள், அதிலிருந்து பயன் பெறவேண்டும், அதுவே சரிதிட்பமான எழுத்துகளின் சிறப்புப் பயன் என்பதை நாம் உணர்கிறோம்.

''குறிப்பிட்ட ஒரு சாரர் தங்களின் (மொழி-இனம்) கோரிக்கைகளை, ஆர்வங்களைக், குறைகளைத் தேவைகளை வற்புறுத்தி வெளியிடும் கருத்துகளைப் புறக்கணிப்பதும் சரியில்லை. அவர்களின் கருத்துகளைப் புறக்கணித்து, அவர்கள் வெளியிட்ட கருத்துகளுக்குத் தவறான எண்ணம் கற்பிக்க முயல்வது நல்லதில்லை. அப்படிச் செய்வது சமன்மைப் புரட்சிக் கருத்துகளுக்குப் புறம்பானதாகும். அது கொலைச் செயலுக்கு ஒப்பானதாகும்.''

என்று இலெனின் மாற்றான் கருத்தை மறைத்து, புறக்கணித்து விட முயலும் செயலையும் கண்டித்திருக்கிறார்.

''கொள்கை பரப்புத் துறையிலும், விளம்பரத் துறையிலும் ஈடுபட்டிருப்பவர்கள், அன்றைய வரலாற்றை அவ்வப்போது தெளிந்த மொழியில் தொடர்ந்து எழுதிக் கொண்டே வர வேண்டியது அவர்களின் கடமையாகும். நாள் அடிப்படையில் எழுதப்பட்டு வரும் தகவல்கள், இயக்கத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு உதவியாக அமையவேண்டும். புரட்சியில் ஈடுபட்

டிருக்கும் ஏழைப் பாட்டாளிகட்குப் பயன்படும் முறையில் வரலாற்றுக் குறிப்புகள் தொகுக்கப்படவேண்டும். போராட்டத்தை எப்படி வகுத்துக் கொள்ளலாம், என்னென்ன வழிமுறைகளைக் கையாளலாம், எப்படி எல்லாம் செயல்பட்டால் செலவைக் குறைக்கலாம், எந்தப் பாதையைப் பின்பற்றினால் நிலையான நல்ல பலன் பெறலாம் என்பதை எழுத்தின் மூலம் வரலாற்றில் குறிக்கப்பட வேண்டும்.

**புதிய தீப்பொறி** (இசுகாரா) ஏட்டின் ஆசிரியர், கவர்ச்சியான முழக்கங்களை உருவாக்குவதில் வல்லவராகத் திகழ்ந்தார். **புரட்சியை ஏற்படுத்துவோம்** என்கிற பழைய முழக்கத்தை மாற்றிப், **புரட்சி வெடிக்கும்** என்றுரைத்தார்.

இவர்களின் திரிபு நிலை கடுமையான புரட்சிப் போராட்டவாணர்களை அமைதிப் படுத்தவே கையாளப்படுகிறது. இதன் விளைவாகப் போராட்டம் உச்சநிலை அடையும்போது இந்த அமைதி முயற்சியில் ஈடுபடுபவர்கள் ஓடி மறைய வேண்டிய நிலை ஏற்படுகிறது. அப்படிப்பட்ட போராட்டம் முழு வெற்றியை அடையும்போது, இவர்கள் புற்றில் மறைந்த பாம்பு தலை நீட்டுவதுபோல வெளிவந்து வேலை நிறுத்தத்தை 'ஓ ஓ' என்று பாராட்டிப் புகழ முற்படுகிறார்கள். அதே நேரத்தில் புரட்சி தோல்வியடைந்தால், இவர்களே, தோல்வியடைந்தவர்களுக்கு அறிவுரை கூறவும், ஏராளமான பழிகளையும் சுமத்த முனைகிறார்கள்.''

என்று இலெனின் புரட்சி வெடித்த காலகட்டத்தில் பச்சோந்திகள் எப்படி இரட்டை வேடம் போடுகிறார்கள் என்பதையும், இந்தக் காலத்தில் ஒருவன் நாக்கை நீட்டிப்பேசத் தொடங்கினாலே போதும் புரட்சி வந்தேதீரும். அப்படி அந்த நாக்கு பேசுவதைக் கொண்டே பல கட்டுரை எழுதிவிடலாம். அந்தந்தக் காலங்கட்குத்தான் முழக்கங்கள் தேவைப்படுகின்றன. அப்படிவரும் முழக்கங்கள் கூட வெறும் சொல் இரைச்சல்களாவே அமைகின்றன. உண்மைகள் பெரும்பாலும் ஒருவன் துணிந்து கட்டற்றுப் பேசுவதன் மூலமே வெளிப்படுகின்றன.''

என்று இலெனின் கொள்கைப் பரப்பிலும் விளம்பரத்துறையிலும் ஈடுபட்டிருப்பவர்களின் கடமையை வலியுறுத்துகிறார். வரலாற்றைப் படைக்க வேண்டியது அவர்களின் பணி. அதை அவர்கள் தொடர்ந்து நாள்தோறும் செய்யவேண்டும். அதன் மூலமே வருங்காலம் சீராக அமைக்க முடியும் என்பதை அழகாக எடுத்துரைத்திருக்கிறார். நாட்டு மக்களின் உள்ளத்தில் இருந்து வெளிப்படும் கருத்துகளுக்கு முதன்மை தரவேண்டும் என்பதையும் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறார். வகுப்புப் போராட்டம் வெற்றிபெற விளம்பரம் சரியான முறை (மொழி) யில் அமையவேண்டும் என்பதில் இலெனின் எவ்வளவு பொறுப்புடன் செயல்பட்டிருக்கிறார் என்பது நமக்குப் புலப்படுகிறது.

எழுத்தாளர் எப்படி எழுதவெண்டும், அதற்கான வழி முறைகள் என்ன, எப்படி எழுதினால் புரட்சிக்குப் பயன்படும் என்பதைத் தீவிரயாக ஆராய்ந்து அவர் வெளிப்படுத்தி இருப்பதும் உற்றுநோக்கத் தக்கது.

''புரட்சிப் படைவீரர்களுக்குப் பயிற்சி தரும் பேராசிரியர்கள் தங்களின் அறிவியல் வெளிப்பட தன்மூப்பாட்சி (சர்வாதிகாரம்) என்பதற்குப் புது விளக்கம் தந்துள்ளனர். ''உறுதியான பாதுகாப்பு'' என்று மூப்பதிகாரத்திற்குப் புதிய பொருள் தந்துள்ளனர். புரட்சிப் போராட்டங்களை இழிவு படுத்தும் நோக்கத்துடன் இந்த அறிவியலாளர்கள் முனைந்திருக்கின்றனர். வரம்புக்கு மீறிய அதிகாரத்தை வல்லந்தமாகப் பறித்து வைத்திருப்பதும், சட்டமுறையாகப் பெற்றுப் பொறுப்பேற்பதும் வேறு வேறானது. ஆனால், இரண்டு முறைகளிலும் வல்லாட்சி விளங்கலாம். இதில் கொள்ள வேண்டிய முதல் கருத்து, சிறுபான்மையினர் மீது வல்லாதிக்கம் செலுத்துவதாகும். வல்லாட்சியில் ஒரு சில அதிகாரிகள் மட்டுமே, மக்கள் மீது ஆதிக்கம் செலுத்துகின்றனர்.

மக்கள் அதிகாரங்களை, உரிமைகளைப் பறித்துத், திருடர்கள், கொள்ளைக் கூட்டத்தினர், கொடுமைக்காரர்கள் மீதும் மூப்பதிகாரம் இயங்குகிறது. இந்த அறிவியல் உண்மைக்கு மாறுபட்ட கருத்துகளைப் புனைந்து கூறுவதன் மூலம் இடது

சாரிகள் வன்முறையை எதிர்த்து, வலது சாரிகளின் சட்ட முரணான வன்முறையில் ஈடுபட வேண்டி இருக்கிறது''.

புரட்சிச் சொற்களுக்கு எப்படி எல்லாம் புதுப்புதுப் பொருளை இட்டுக் கட்டுகிறார்கள் என்பதையும் சிறப்பாக எடுத்துக் கூறி விளக்கி இருக்கிறார் இலெனின்.

வகுப்புப் போராட்டத்தின் வெற்றியில் அவர் எடுத்துக்கொண்ட சிறப்புப் பங்கும், பொறுப்பும் எந்த அளவிற்கு அவர் அக்கறையுடன் பொறுப்பேற்றார் என்பதும் இதிலிருந்து புலப்படுகிறது.

பல மொழிகளைப் பல நாடுகளின் நடப்புகளை விரிவாகவும் விளக்கமாகவும் அவர் அறிந்திருந்த காரணத்தினால் பல்வேறு சொற்களுக்கும் உரிய பொருளை எவரும் வியக்கத்தக்க முறையில் அறிந்திருந்தார் இலெனின்.

''ஒரு நேரத்தில் மார்க்சிய அ. ஆ. இ-க்களை எல்லாம் நாம் திரும்பத்திரும்பக் கூறவும், வலியுறுத்தவும் வேண்டியிருந்தன. இப்போதும் இந்தத் தேவை ஏற்பட்டிருக்கிறது. ''நம்பிக்கை மோசடி'' என்பது இழிசொல் இல்லை. 'நம்பிக்கை மோசடி' என்ற சொல் அறிவியல் நெறி, அறிவியல் முறையான சரியான சொல் ஆகும்.

இடை நிலை மக்கள், வணிகர்கள், ஆகியோரின் உள்ளக் கிடைக்கையை, அவர்களின் எண்ணங்களை, அவர்களைப் பற்றிய உண்மைகளை வெளிப்படுத்துவதற்குப் பயன்படும் நல்ல சரியான சொல்தான் 'நம்பிக்கை மோசடி'.

அதிகாரவகுப்பு உடன்பாடு கொள்வதற்கு நம்பிக்கைக் கேடு என்று பொருள்படும்படி பயன்படுத்துவது சரியில்லை.''

இப்படி இலெனின், அதிகார வகுப்பை எதிர்த்து இடைத்தட்டு மக்கள், வணிகர்கள் போராடுவதை உயர்வாக எல்லோரும் கருதும் முறையில் தக்க நேரத்தில் இடித்துரைத்துச் சொற்களுக்கு உரிய உயர்ந்த பொருளை விளக்கி இருக்கிறார்.

''சமன்மைக் குடியரசினர் தேர்தல் நேரத்தில் மேற்கொள்ளும் உடன்பாடுகளை, மக்கள் எல்லோரும் புரிந்துகொள்ளக் கூடிய முறையில் தெளிவான-விரிவான-எளிய சொற்களில் எடுத்துக் கூறவேண்டும். மக்களுக்கு விளங்காத முறையில் கடுமையான சொற்களைப் பயன்படுத்தக் கூடாது. தாய்மொழிச் சொற்கள்

தவிர வேற்றுமொழிச் சொற்களை முழக்கங்களுக்கோ, விளக்கங் களுக்கோ, முடிவுகளைத் தெளிவுபடுத்தவோ பயன்படுத்தக் கூடாது. அழகுக்காக அடுக்குமொழிகளையோ, மக்களுக்குப் பழக்கமில்லாத கடினமான இருபொருள் சொற்களையோ பயன் படுத்த வேண்டியதில்லை.

உண்மைகளைப் புரியும்படி, புள்ளி விளக்கங்களோடு கூற வேண்டும்.

சமன்மைக் கொள்மையின் சிறப்பைப் பற்றியும், இன்றைய உருசிய புரட்சியைப் பற்றியும் மக்கள் தெளிவாகப் புரிந்து கொள்ள வழிமுறைகளைக் கையாள வேண்டும்.

தேர்தல் நேரத்தை மக்களுக்கு அறிவு புகட்டும் முறையில், தாய் மொழியில் பயன்படுத்த வேண்டும். அயல்நாட்டு மொழி யையோ, மக்களுக்குப் புரியாத சொற்களையோ பயன்படுத்து வதால் உருப்படியான பலன் கிட்டாது.''

தம்முடைய கொள்கையை விரைவாக, முறையாக மக்கள் மனத்தில் பதிய வைக்க எளிதான முறையில் மொழியைப் பயன் படுத்தவேண்டும் என்பதை இலெனின் வலியுறுத்திச் சுட்டிக் காட்டுகிறார்.

''தோழர்களே! எந்தெந்தச் சொற்களைத் தேர்ந்தெடுத்துக் கருத்துக் கோவையை உண்டாக்குகிறோம் என்பதை ஒருமுறை எண்ணிப் பாருங்கள். ஏழைப் பாட்டாளிகட்கு அரசியல் தெளிவு இருக்க முடியுமா? அவர்கள் என்ன சமன்மைக் குடியரசு வாணர்களா? அவர்களிடம் பேசியதையே மீண்டும்மீண்டும் சின்னஞ் சிறியவற்றைப் பென்னம் பெரிதாக்கி உயர் நடையில் புலப்படுத்துவதால் என்ன பயன்? எல்லோரும் எல்லாம் அறிந் தவர்களாக எல்லோரையும் கருதிக் கொள்வது சரியில்லை. அப்படி இருந்துவிட்டால் ஏழைத் தொழிலாளர்களுக்கு அரசியல் தெளிவு இருப்பதாகக் கருதலாம். எனவே, அப்படித் தவறான கருத்தைத் தொழிலாளர் வகுப்பிற்குக் கற்பிப்பது அவர்களின் தனி அமைப்பிற்கும் உரிமைக்கும் கேடு விளைவிப்பதாகும். சமன்மைக் குடியாட்சியில் உண்மையான உரிமை இருக்க முடியும். சேரவேண்டிய இடத்திற்குப் போகவேண்டிய பாதை யில்தான் போகவேண்டும்.

''உருசிய நாடு புதிய புரட்சிப் பாதையின் உயர் நிலையினை நோக்கிச் செல்கிறது என்கிறோம், அதுதான் உண்மை. இதிலிருந்து நாம் என்ன தெரிந்து கொள்கிறோம்? உருசிய நாடு இன்னும் அடையவேண்டிய நிலையை அடையவில்லை என்பதுதான். அதுதான் தருக்க முறையிலும், நடைமுறையிலும் நாம் புரித்துகொள்கிறோம். ஆனால் அந்தப் புரட்சி இலக்கை நோக்கிச் செல்வதையே, மிகப் பெரியதாக வண்ணிக்கப்படுகிறது. இப்படி வண்ணிப்பது அறியாமை நிரம்பிய மடமை. நாம் இலக்கை நோக்கிச் செல்வதைக் கொண்டே, நம் எதிர்காலம் இப்படித்தான் அமையும் என்று வண்ணிக்கப் படுகிறது. இத்தத் தவறு எப்படி உண்டாகிறது என்றால், இன்று நாம் எதிர்நோக்கியுள்ள நிலைமைகளைச் சீராகப் புரிந்துகொண்டு பெறவேண்டிய தெளிவைப் பெறவில்லை என்பதையே இது காட்டுகிறது-''

என்று பரபரப்புடன் ஒரு முடிவுக்கு வந்து, தம் அறிவாற்றலை முழுமையாகப் பயன்படுத்தாதவர்களை இலெனின் சுட்டிக் காட்டுகிறார். புரட்சி வகுப்புப் போராட்டத்தின் தலைவன், புரட்சிநோக்கினன் கடைப்பிடிக்க வேண்டிய பொறுப்பு என்ன என்பதை அவர் எந்த அளவிற்கு உணர்ந்திருக்கிறார் என்பதை நாம் காண்கிறோம். வெற்று ஏமாற்றுச் சொற்களும், கற்பனைகளும் புரட்சிக்கு எவ்வளவு கேடாக அமையும் என்பதை அவர் தெளிவாகக் கூறி இருப்பது வருமுன் கூறி மக்களை மயக்கும் இன்றைய புரட்சியாளருக்கு ஒரு நல்ல எச்சரிக்கையாகும். இப்படிப்பட்ட தவறுகள் செய்வதால் பல நேரங்களில் புரட்சிகள் தோல்வியில் முடியும் என்பது வரலாறு புகட்டும் உண்மை.



''வணிகர்களும் இடைநிலை மக்களும் இயக்கும் குடியரசு பற்றி கவர்ச்சியாகப் பேசப்படுகிறது. உள்ளத் தூய்மையுடன் பல கூறப்படுகின்றன. ஏராளமான வாக்குறுதிகள் தாராளமாக வழங்கப்படுகின்றன. ஆனால் உண்மையில் அந்தக் குடியரசில் நடப்பது என்ன? உரிமை பற்றியும், சமநிலை பற்றியும் வெறும் புகழாரம் சூட்டப்படுகிறது. ஆனால், உரிமையைப் பறிக்கவும்,

ஏற்றத்தாழ்வை நிலைநிறுத்தவும் அந்தக் குடியரசு இடம் கொடுக்கிறது. ஆண்களுக்கு ஒரு நீதி, பெண்களுக்கு ஒரு நீதி என்று நிலை நிறுத்துகிறது.

''ஆனால் சமன்மைக் குடியரசு அப்படியன்றே. நில உடைமை யாளர்கள், முதலாளிகள், ஆகியோரின் புரட்டுகளை அம்பலப் படுத்தி, அவர்கள் கூட்டாக மிகை விளைவுப் பொருள்களைப் பட்டினியால் வதைப்படும் தொழிலாளர்களுக்கே அதிக விலைக்கு விற்றுக் கொள்ளையடிப்பதை எதிர்த்துப் போராடச் சமன்மைக் குடியரசு வழி வகுக்கிறது.

'' நாம் ' கட்சி ' என்ற சொல்லை விரும்பவில்லை. அதனைப் பயன் படுத்தக்கூடாது என்றும் கூறுகிறோம். ஏன்? இங்கிலாந்தில் உள்ள தோழர்களும் கட்சி அமைப்பை வெறுக் கிறார்கள். தொழிலாளர் வகுப்பிற்கு எதிரான தனிப்பட்ட தலைவர்களின் விருப்பத்திற்காகவே அங்குக் கட்சிகள் அமைக்கப்படுகின்றன. இன்று இங்கிலாந்திலும் அமெரிக்கா விலும் அப்படிப்பட்ட நாடாளுமன்ற முறை இருப்பதாகக் கூறினால், நாமும் அப்படிப்பட்ட அரசியல் கட்சிகளுக்கு எதிரானவர்களே. நமக்கு என்ன வேண்டும்? மக்களுடன் நெருக்கமாகத் தொடர்பு கொண்டு, அவர்களை வழிநடத்திச் செல்லக்கூடிய கட்சிகள்தாம் நமக்கு வேண்டும்'' என்று பல் வேறு குடியாட்சி முறைகளை விளக்கிச் சமன்மைக் குடியாட்சி யின் சிறப்பை விளக்குகிறார் இலெனின். மேலும் உண்மையான அரசியல் கட்சிகள் ஒரு சிலரின் விருப்பு, வெறுப்புக்கு மட்டுமே இயங்குவதால், மக்களுக்கு உருப்படியான தொண்டு செய்திட இயலாது என்பதை வலியுறுத்துகிறார். மக்களுடன் தொடர்பும், மக்களின் ஆதரவைப் பெற்ற கட்சிகளே, மக்களுக்குத் தேவையான மேம்பாடுகளைச் செய்ய முடியும் என்பதைத் தெளிவாக்குகிறார்.

## தேசியச் சிக்கலும் மொழிக் கொள்கையும்

''அவரவர் தம்தம் தாய்மொழியில் கல்விகற்கும் உரிமை இருக்க வேண்டும்.

ஒவ்வொரு குடிமகனும் தன்னுடைய தாய்மொழியில் கூட்டங் களில் பேசவும், அரசு அமைப்புகளில் தாய்மொழியில் கலந்துரை யாடவும் உரிமை இருக்க வேண்டும்.

மக்கள் பொதுவாக எங்கும் தங்கள் மொழியில் பேசுவதற்கு உரிமை இருக்க வேண்டும்''

உலகின் வளமான பல மொழிகளில் பயிற்சி பெற்ற இலெனின், அயலார் மொழிகள் மீது விருப்பம் கொள்ளாமல், தம்முடைய தாய்மொழிப் பற்றை வெளிப்படுத்தும் முறையில் அழுத்தம் திருத்தமாகத் தம் கட்சியில் இரண்டாம் மாநாட்டில் கட்சியின் திட்டம் பற்றிப் பேசி இருப்பது குறிப்பிடத்தக்கது. விருப்ப முள்ளவர்கள் எத்தனை மொழிகளை வேண்டுமானாலும் கற்கலாம்-அதன் மூலம் பெறக்கூடிய அறிவு வளர்ச்சியைப் பெறலாம்; ஆனால் அந்த மொழிகளின் மூலம் பெற்ற அறிவைத் தம் தாய்மொழியில் மட்டுமே, தாய்மொழியைக் கொண்டே, தாய்மொழியின் மூலமே பயன்படுத்த வேண்டும் என்பதையும், பயிற்றுமொழி தாய்மொழிதான் என்பதும் இலெனினின் தெளிவான, உறுதியான முடிவு.

மக்கள் எல்லோரும் புரிந்துகொள்ளக் கூடிய வாய்ப்பு அதிக மாகக் கொண்டது தாய்மொழியே. வேற்று மொழியில் வலிந்து கூறப்படும் கருத்துகள் மக்களுக்கு உருப்படியான பயன்தராது என்பதையும் சுட்டிக் காட்டுகிறார்.

புரட்சி வெற்றிபெற, மக்களின் ஆதரவுபெற எளிதான கருவி தாய்மொழி என்பதை அவர் உணர்ந்து பேசியிருப்பது நமக்குப் பாடமாகும்.

''அன்புள்ள நண்பரே!

உருசியாவிற்கு ஒரே ஒரு மொழி ஆட்சிமொழியாக இருக்க வேண்டும் என்பதை நீங்கள் ஆதரிக்கிறீர்கள். நாடு முன்னேற அப்படி ஓர் ஆட்சிமொழி இருப்பது இன்றியமையாதது என்று நீங்கள் கருத்துத் தெரிவித்திருக்கிறீர்கள். உங்கள் கருத்தை

நான் ஏற்க மறுக்கிறேன். நான் இதைக் குறித்து ஏற்கனவே 'உண்மை' ஏட்டில் என் கருத்தை எழுதியிருக்கிறேன். இது வரை நான் கூறிய கருத்தை யாரும் மறுக்கவில்லை. உங்களின் ஏதுக்கள் எவையும் எனக்கு நிறைவு தருவதாக இல்லை. மாறாக அந்தக் காரணங்கள் என் கருத்தையே மிகுதியாக வலியுறுத்துகின்றன.

''ஏராளமான சிறுபான்மையான இனங்களுக்கும், பின்தங்கிய நிலையில் உள்ள இனங்களுக்கும் உருசிய மொழி முன்னேற்றத் திற்குப் பெரிதும் பயன்பட்டு வந்திருப்பதை யாரும் மறுக்க இயலாது. ஆட்சிமொழி என்பது என்ன? உருசிய மொழியி லிருந்து மக்களை அடித்துத் தொலைவில் விலகிச் செல்ல பயன் படும் பிரம்பா? தேசியச் சிக்கலில் இணைந்துள்ள மக்களின் மனப்போக்கை ஏன் நீங்கள் புரிந்து கொள்ள மறுக்கிறீர்கள்? பெரிய மாநிலங்களாக நாட்டைத் துண்டாடவும், பொதுவான மொழியைக் கட்டாயமாகத் திணிப்பதும் முன்னேற்றத்தைத் தடுக்கத்தான் நீங்கள் கூறும் ஆய்வுரைகள் பயன்படும்.

''மக்கள் மனநிலையைவிட, அவர்களின் பொருள்நிலை மிகவும் இன்றியமையாதது. உருசியாவில் ஏற்கனவே முதலாளியப் பொருள்நிலை இருக்கிறது. அதனால் உருசிய மொழியை விட்டுக் கொடுப்பதற்கு வழியில்லை. உங்களுக்குப் பொரு ளியலின் ஆற்றலில் நம்பிக்கை இல்லை. இந்த வகையில் நீங்கள் பொருளியல் வளர்ச்சியை முறித்து முடமாக்குகிறீர் என்பது புலப்படவில்லையா? அதனால் வளர்ச்சி தடைபடும் என்பதை நீங்கள் உணரவில்லையா? காவல் துறை ஆட்சி குலையும்போது, அதன் விளைவாகப் புதுப்புது அமைப்புகள் ஆயிரக்கணக்கில் தோன்றுமா இல்லையா? உருசிய மொழியைப் பாதுகாப்போம் என்ற போலி முழக்கம் ஒப்பப்படும் நிலைதானே அதனால் ஏற்படும். இதன் காரணமாகவே, நான் உங்கள் கருத்தை ஏற்க மறுக்கிறேன்''

என்று இலெனின் ஆட்சிமொழி பற்றி கருத்துக் கூறி இருக்கிறார், தாம் எழுதிய ஒரு மடலில்!

ஒரே ஒரு மொழியை நாட்டின் ஆட்சிமொழியாகக் கொண்டு வர முயல்வது எவ்வளவு கேடானது என்பதையும், மக்களை

ஏமாற்றவும், மக்களின் பொருள்நிலை சீர்குலையவும் தான் அப்படிப்பட்ட முயற்சி பயன்தரும் என்பதையும் இலெனின் தெளிவுபடுத்தியிருப்பது, ஒரே மொழியைப் பேசும் மக்கள் வாழாத நாடுகளில், பல்வேறு மொழிபேசும் மக்கள் வாழும் நாட்டிலும் தனிப்பட்ட ஒரு மொழியை மட்டும் ஆட்சிமொழி யாக்கத் துடிப்பது தவறானது; தீதானது என்பதைத் தெளிவு படுத்தி இருப்பது காணில், இன்று உலகில் வாழும் பல்வேறு மொழிபேசும் மக்களுக்குக் கலங்கரை விளக்காக அமைந் துள்ளது இலெனினின் விளக்கம்.



''தேசியப் பண்பாட்டிற்கு அதிகச் சிறப்புக் கொடுத்து மாக்சிய வாணர்கள் கூக்குரல் எழுப்பி வருகின்றனர். தேசியச் சிக்கல்களை அணுகி அதற்குத் தீர்வுகாண முற்படும்போது, நமது விளக்கம், கொள்கை அடிப்படையில் அமைப்பதற்குத் தேசியப் பண்பாட்டைக் கருத்தில் கொண்டு செயல்படுவதே இதற்குச் சிறப்புக் காரணம். ஏழை, இடைநிலை வகுப்பைச் சேர்ந்தவர்களின் போராட்டத்தைத் தனிமைப்படுத்தும் போக்கை உருவாக்குவது சரியில்லை. ஆனால் அதனைத் தான் 'தேசியப் பண்பாடு' என்ற கூக்குரல் செய்கிறது. மேலும் இதன் விளைவாக ஒவ்வொரு குடிமகனும், தன்னை ஒரு குறிப்பிட்ட தேசிய இனத்தைச் சேர்ந்தவனாகவே பதிவு செய்து கொள்ள வேண்டி இருக்கிறது.

இதனால் தேசிய நாடாளு மன்றமும், அமைச்சர்களும், ஒவ்வோர் இனத்தின் மீதும் கட்டாயமாக வரிகளைத் திணிக்கும் உரிமை உண்டாகிறது. இதனால் தேசியச் சிக்கலும், முதலாளியக் கண்ணோட்டமும் மலர்கின்றன. முதலாளியம் ஒழிக்கப்படும் நிலை இல்லை. விளைவுப் பொருள்களின் வாணிபக் கட்டுப்பாடு என்ற பெயரால் பற்பல தவறுகள் சட்டத்தின் துணையுடன் நடைபெறுகின்றன. இவையே தேசியப் பண்பாட்டு உரிமை உண்மையும், திட்டமும் முறை கேடுகளும், வன்முறைகளும் விளைவதற்கு நாட்டில் வழிகோலு கின்றன.

மார்க்சியத்திற்கு எப்படிப்பட்ட நல்ல விளக்கம் தரப்பட்டாலும், அது சிறந்ததாக, உயர்ந்ததாகக் கருதப்பட்டாலும், அது தேசியத்திற்கு ஈடானது என்று கூற இயலாது. மார்க்சியத்தின் தேசியம், எல்லா நாடுகளும் ஒன்றுபட்டு வாழவேண்டும் என்று அனைத்துலக ஒருமைக்கு அழைத்துச் செல்கிறது. அமைக்கப் படும் ஒவ்வொரு தொலைக்கல்லும், தொடர் வண்டிப்பாதையும், அனைத்துலக அடிப்படையில் அமையும் புதுப்புது உலகத் தொழிலாளர் சங்கங்கள் இயங்கவே நேரிடுகின்றன.

தேசியத்தை உடைப்பதற்குத் தொழிலாளர் வகுப்பு ஒரு போதும் இடம் தராது. மாறாகத் தேசிய வளர்ச்சிக்குப் பாடு பாடுவதே தொழிலாளர் வகுப்பின் நோக்கம். அதே நேரத்தில் தேசியத்தின் பெயரால் பல வேறு தேசிய இனங்கள் ஒன்று படுவதைத் தொழிலாளர் வகுப்பு அக்கறையுடன் ஊக்கி வைக்கிறது. இதற்கு மாறாகச் செயல்படுவது பிற்போக்குத் தேசிய அநாகரிகமாகும். அதே நேரத்தில் அரசியல் முடிவுகள், வகுப்பின் அடிப்படையில்தான் ஒடுக்கப்படுகின்றன என்பதை நினைவில் கொள்ள வேண்டும். இனங்களைக் கருத்தில் கொண்டு எடுக்கப்படுவது இலலை. இதையும் மீறி முழுக்க முழுக்கத் தேசியப் பண்பாடு என்று சமூகத்தில் நடைமுறைப் படுத்துவது கேடான விளைவுகளை உண்டாக்கும். அதனால் ஏழைத் தொழிலாளர் வகுப்பு தாக்குறும்-''

என இலெனின் தேசியத்திற்கும், இனநலனுக்கும் உள்ள வேற்றுமையைத் தெளிவுபடுத்துகிறார். தேசியத்தின் பெயரால் இனநலன் தாக்கப்படும் வாய்ப்பும், பல்வேறு இனத்தைச் சார்ந்த தொழிலாளர் வகுப்பு தாக்கப்படும் என்பதையும் தெளிவாக எடுத்துரைத்திருக்கிறார்.



''சுவிட்சர்லாந்து நாட்டில் மொத்தம் மூன்று மொழிகள் தேசிய மொழிகளாக ஏற்றுக் கொண்டு அரசு செயல்பட்டு வருகிறது. நிறைவேற்றப்படும் சட்டங்கள் மக்கள் கருத்தை அறிய ஐந்து மொழிகளில் அச்சிடப் படுகின்றன. அதாவது உரோமானிய மொழி வழிவந்த இரு மொழிகளிலும் அச்சிடப் படுகின்றன. 1900-ஆம் ஆண்டு எடுத்த மக்கள் தொகைக் கணிப்பில்,

3,315,443 பேரில் 38651 பேர் மட்டுமே அந்த இரண்டு மொழிகளைப் பேசுவதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. மொத்த மக்கள் தொகையில் அவர்கள் ஒரே ஒரு விழுக்காடுதான். அங்குப் போர்க்களத்தில் உள்ள அதிகாரிகள் உள்பட அனைவரும் அவரவர் தம் தாய்மொழியில் பேச உரிமை வழங்கப் பட்டிருக்கிறது.

இதனால் சுவட்சர்லாந்தின் நடைமுறை அரசியலில் நாட்டின் அமைதி நன்கு பாதுகாக்கப்பட்டு வருவதைக் காண்கிறோம். மக்கள் ஆட்சி சீராக இயங்கி வருவதையும் கண்டு வரு கிறோம்.

இனங்கள் பல இருப்பினும், அவர்களிடையே சமநிலை நிலவி வருகின்றது. ஒவ்வோர் இனத்திலே இருக்கும் ஒவ்வோர் ஏழைத் தொழிலாளியும் ஒற்றுமைக்குப் பாடுபட முடிகிறது. தேச ஒற்றுமை நிலைக்கிறது. நாடு நலம்பெற வேண்டும் என்ற எண்ணம் அனைவருக்கும் ஏற்பட்டு வருகிறது.

இதற்கு மாறாகத் தேசியப் பண்பாட்டு ஒற்றுமை ஏற்பட வேண்டும் என்பது, நாட்டின் ஒற்றுமையைக் குலைத்துப் பலவேறு இனங்களையும வேறுபடுத்தவே பயன்படும்''

என்று இலெனின் சிறுபான்மையினராக இருப்பவர்களின் மொழியைப் புறக்கணிககக் கூடாது என்பதைச் சுட்டிக் காட்டு கினறார். ஆட்சிமொழிக் கொள்கை நாட்டின் முன்னேற்றத் திறகு உதவியாக அமைப்பது என்பதைத் தெளிவாக்கியிருக் கிறார். ஆட்சிமொழி பிற மொழியினர் மீது திணிப்பதன் மூலம் நாட்டின் ஒற்றுமை சீர்குலையும் என்பதை அழகாக எடுத்துக் காட்டியிருக்கிறார். ஒரு மொழி முதன்மை மொழியாகவும், மற்ற மொழியினரை அடிமைகளாகவும் ஆக்கிடும் சூழ்நிலையை உண்டாக்குவது நாட்டின் நலனுக்கும் முன்னேற்றத்திற்கும் இடர்ப்பாடானது எனபதை இலெனின் கூறியிருப்பதை, நாட்டு நலனை விரும்பிச் செயல்படுபவர்களுக்கு நல்ல பாடமாக அமைத்துக் கூறி இருப்பது எல்லோரும் மனத்தில் கொள்ள வேண்டியதாகும்.

''ஆட்சி மொழி என்றால் என்ன ?

உருசிய மொழியை நாட்டு மக்கள் எல்லோரின் மீதும் திணிப்பதுதானே !

உருசிய மொழி அனைத்துக் கல்விக்கூடங்களிலும் பயிற்று விக்க வகைசெய்வதுதானே !

மடல் போக்குவரத்து அனைத்தும் ஆட்சிமொழியிலேயே இருக்கவேண்டும் என்பதுதானே !

அந்தந்த மக்கள் வாழும் பகுதிகளில் அவர்களின் தாய் மொழியைப் பயன்படுத்தக் கூடாது என்பதுதானே !

இப்படிப்பட்ட ஆட்சிமொழிக் கொள்கையை ஏற்பவர்கள் எந்த உண்மையின் அடிப்படையில் செய்கிறார்கள்.

உருசிய மொழியை தாய்மொழியாகக் கொள்ளாதவர் களைக் கட்டுக்குள் வைத்திருக்க வேண்டும். அதற்கு இது தான் வழி என்று சிலர் கூறுகிறார்கள். உருசிய நாடு பிளவு பட்டுப் பிரிந்து போகாதிருக்க இம்முயற்சி தேவை என்று சிலர் கூறுகிறார்கள்.

உருசிய மொழி பேசுபவர்களால்தான் உருசிய நாடு ஒன்றாக, ஒற்றுமையாக மலர முடிந்திருக்கிறது. எனவே மற்றவர்கள் உருசிய மொழியினருக்குக் கீழ்படிந்து நடக்க வேண்டும் என்று சிலர் முறையிடுகிறார்கள். மாநில மொழிகள் (உருசிய மொழி தவிர மற்ற மொழியினர்) ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள்தான் வளர்க்கப்பட வேண்டும்-ஒரு குறிப்பிட்ட ஆட்சி மொழிமைப் பேணுவது, நாட்டின் ஒற்றுமையையும், பண்பாட்டையும் பாதுகாக்கத் தேவை என்று சிலர் கூறு கிறார்கள். அவர்களின் கூற்றை மறுக்கவில்லை. ஆனால் நாம் எதை விரும்புகிறோம். உருசிய நாடு முழுவதும் ஒடுக்கப் பட்ட நிலையில் வாழ்ந்த பல்வேறு இனத்தவர்களையும், ஒன்று படுத்தி, அவர்களிடையே ஒற்றுமையை உண்டாக்க விரும்பு கிறோம். உருசிய மொழியைக் கற்கும் வாய்ப்பு எல்லோருக்கும் ஏற்படுவதில் தவறில்லை. ஆனால், அதில் கட்டாயப் படுத்தும் நிலை இருக்கக் கூடாது. அதற்காக மக்களைப் பெருத்த தடி கொண்டு தாக்கி விரட்டக் கூடாது. என்னதான் பண்பாட்டின் சிறப்புகள் கூறப்பட்டாலும், ஆட்சிமொழியின் பெயரால்

வல்லந்தம் மேற்கொள்வதை நாம் விரும்பவில்லை. உருசிய மொழியைக் கட்டாயப்படுத்திப் படிக்கவைக்க வேண்டிய தேவை இல்லை.

உருசியாவில் முதலாளியம் பெரும் பேயாக வளர்ந்திருக்கிறது என்பதை ஒப்புக் கொள்கிறோம். இன்று உருசிய மக்கள் ஓர் இடததில் இருந்து மற்றோர் இடத்திற்குக் குடி பெயர்ந்து பிற இனத்தவருடன் கூடி வாழவேண்டிய நிலை ஏறபட்டிருப்பதை யாரும் மறுக்க முடியாது. அந்த நிலையில் யார் யார் உருசிய மொழியைக் கற்கவேண்டிய கட்டாய நிலை ஏற்படுகிறதோ அவர்கள் தாங்களாகவே உருசிய மொழியைப் படிக்க முற்பட்டுவிடுவார்கள். அதனால் தனித் தன்மைகள் தாமாக மறையும்.

அதே நேரத்தில் கட்டாயப் படுத்துவதன் மூலமோ, ஆட்சி மொழியை வல்லந்தமுடன் திணிப்பதன் மூலமோ, பிற மொழியினருக்கு உருசிய மொழி மீது வெறுப்பும், பகைமையும் உண்டாகும். அதன் விளைவாக எளிதில் நன்றாக வளரக் கூடிய உருசிய மொழி வளர்ச்சி பெற முடியாமல் போய்விடும் என்பது உறுதி. மற்ற மொழியினர் உருசிய மொழியைக் கற்பதற்கு அஞ்சும் நிலை ஏற்படும். மேலும் பலப்பல சிக்கலான விளைவுகள் ஏற்பட்டு ஒற்றுமை குலைந்து, வேற்றுமை அதிகரித்துப் பல வகையான தவறான எண்ணங்கள் உண்டாக வழி ஏற்படும்.

அப்படிப்பட்ட ஆட்சிமொழியை யார் வரவேற்பார்கள்? அந்த மொழி யாருக்கு வேண்டும்?

இந்த நிலையில் உண்மைகளைக் குறிப்பாக, நாட்டில் மலிந்து விட்ட கொடுமைகளைப் பொருட்படுத்தாதவர்கள்தாம் அப் படிப்பட்ட ஆட்சி மொழியை வரவேற்கக்கூடும்.

அதனல்தான் உருசிய மார்க்சியவாணர்கள் எந்த மொழியையும் ஆட்சி மொழியாகத் திணிக்கப்படக் கூடாது என்ற கருத்தைக் கொண்டுள்ளனர். நாடு முழுவதும் கல்வியை அவரவர்களின் மாநில மொழிகளிலேயே கற்பிக்கப்பட வேண்டும் என்கி றார்கள். மேலும், ஒரு புதிய சட்டத்தைக் கொண்டுவந்து, அரசியல் சட்டத்தில் இதற்கான மாற்றம் செய்திட வேண்டும்

என்கிறார்கள். பெருநாட்டின் சிறுபான்மை மக்களின் உரிமைகளைப் பாதுகாக்கவும், எந்த ஒரு சிறு தேசிய இனத்தினருக்கும் உரிய சம உரிமை பாதுகாக்கவும் அப்படிப்பட்ட ஒரு சட்டப் பாதுகாப்பு செய்வது தேவை என்று உருசிய மார்க்சியவாணர்கள் கருதுகின்றனர்''

என்று இலெனின் அறிவிலிக்கும் கூட புரியக்கூடிய எளிய முறையில் ஆட்சி மொழியைப் பற்றி விரிவாக, விளக்கமாக, பட்டறிவு வழி தெளிவுபடுத்தி இருக்கிறார்.

இதற்கு மற்றும் ஒரு காரணமும் இருக்கிறது. உருசிய மொழி என்பது ஒரு தனிப்பட்ட தன்மை கொண்ட மொழி அன்று. கணக்கெடுப்பின் போது மாபெரிய உருசிய மொழி, பைலோரசிய மொழி, உக்ரேனிய மொழி ஆகியவற்றையும் சேர்த்து இணைத்துத்தான் உருசிய மொழி என்று கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. அப்படியும் கூட உருசிய மொழி பெருவாரியான மக்கள் பேசும் மொழி என்று எடுத்துக்கொள்ள வழியில்லை. மற்ற மொழிகளைப் பேசுபவர்களைவிட உருசிய மொழி பேசுபவர்கள் அதிகமாக இருக்கின்றனர் என்பதே உண்மை !

இதிலிருந்து இப்படிப்பட்ட ஆட்சி மொழிச் சிக்கலில் அல்லல் படும் மக்கள் எங்கு வாழ்ந்தாலும், எந்த நாட்டினரானாலும் பெற வேண்டிய தெளிவைப் பெற்று நாட்டின் ஒற்றுமையைப் பாதுகாத்து, வாழும் இனத்தினர் எல்லோரும் சமநிலை, சம உரிமை, சமன்மை பெறும் வகையில் ஆட்சி மொழிக் கொள்கையை அமைத்துக் கொள்ள இலெனின் நல்ல பாதை காட்டியிருப்பது குறிப்பிடத் தக்கது.

''பல வேறு இன மக்களுக்கிடையே சமஉரிமை இருக்க வேண்டும். எல்லா மொழிகளும் சம நிலையில் கருதப்பட வேண்டும். இதுவே மார்க்சியவாணரின் குறிக்கோள்; மக்கள் ஆட்சிக்கு இது நீடித்து இருக்க வேண்டும். ஏழைத் தொழிலாளரிடையே ஒற்றுமைக்கும், தோழமைக்கும் இது இன்றியமையாதது. போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களுக்கு எந்தவித நம்பிக்கைக் கேடும், ஐயங்களுக்கு இடமும் மக்களாட்சியில் இருக்கக் கூடாது. அனைவருக்கும் சமஉரிமை,

சம்மாய்ப்பு தருவது என்பது எளிமையானதன்று. மேலும் அதற்குச் சட்டமுறையில் பாதுகாப்பும் தரப்பட வேண்டும். தொழிலாளர் ஒற்றுமையை எந்தக் காரணம் கொண்டும் உடைக்கக் கூடாது. அதனால்தான் நாட்டில் ஆட்சிமொழிக் கொள்கையில் மார்க்சியவாணர் தெளிவான கொள்கையை வகுத்துக் கொடுத்திருக்கின்றனர். ஒரு நாட்டில் வாழும் அனைத்து மொழி இனத்தவரையும் ஒன்றுபடுத்தப் பாடு படுவதே மார்க்சியம்.

அந்தந்த மாநிலத்தில் குடியிருக்கும் மக்கள் அவர்களின் மொழிக்கு எந்தவகைக் குறைபாடும் இல்லை என்பதை நிலை நாட்டுவதற்கு வழிகோலுவதே மார்க்சியம்''

என்று இலெனின் மார்க்சியத்தை உருசிய நாட்டின் நிலைமை களைக் கொண்டு (உலகுக்கு)விளக்கி இருக்கிறார்.

''சமன்மையின் குறிக்கோள் மனித சமுதாயத்தைச் சிறுசிறு மாநிலங்களாகப் பிரிப்பது அன்று. எந்த ஓர் இனத்தையும் தனிமைப்படுத்துவதும் சமன்மை இல்லை; மாறாகப் பல்வேறு இனத்து மக்களை ஒன்று சேர்ப்பதும், அவர்கள் கூடி வாழ்வதற் கான முறைகளைக் கையாளுவதுதான் சமன்மையம். இதை ஒரு சிலர் பண்பாட்டுத் தேசிய உரிமையின் மூலம் பெறமுடியும் என்று கருதுகிறார்கள். ஆனால், ஒடுக்கப்பட்ட தேசிய இனங்களில் முழு விடுதலைக்காக வகுக்கப்படும் அரசியல் திட்டம்; இதனால் பாதிக்கப்படக் கூடாது; இதுதான் சமன்மையத்தின் நோக்கம். மனித சமுதாயத்தில் உள்ள பல்வேறு வகுப்புகளுக்கு இடையே உள்ள வேற்றுமைகளை அகற்றுவதே சமன்மையம். இந்தக் குறிக்கோளை அடைய சிறிது காலம் பிடிக்கும். ஆனால், இறுதியில் பல ஆண்டுகளாக் ஒடுக்கப்பட்டு வந்திருக்கும் இனத்தை மீட்டு அவர்களுக்கு புதுவாழ்வு முழு உரிமை அமைதற்குச் சமன்மையமே உரிய வழியாகும்'' என்கிறார் இலெனின்.

''கல்வியைத் தம்முடைய தாய்மொழியில் பயில்வதற்கான உரிமையை மக்கள் எல்லோருக்கும் அளிக்கப்பட வேண்டும். அதற்கான செலவை அரசாங்கமே ஏற்கவேண்டும். அந்தந்தப் பகுதிகளிலே வாழும் மக்கள் அவரவர்கள் மொழியிலேயே

பேசவும் எழுதவும் உரிமை அளிக்கப்பட வேண்டும். ஆட்சி மொழிக்கு உரிய நிலையைப் பிற மொழிகளுக்கும் அளிக்கப்பட வேண்டும். இதற்கு உரிய வழி ஒரு குறிப்பிட்ட மொழியை மற்ற மொழியினர் மீது ஆட்சி மொழியாகத் திணிப்பது கூடாது.''

நாட்டில் உள்ள பல்வேறு மொழியினர் அவரவர்களுடைய மொழிகளின் வளர்ச்சிக்காகப், பாதுகாப்புக்காக உரிய தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியது அரசின் கடமை என்று இலெனின் வலியுறுத்தி இருப்பது குறிப்பிடத்தக்கது. சிறுபான்மையினர் பேசும் ஒரு குறிப்பிட்ட மொழியைப் பிற மொழி பேசும் பெரும்பான்மையினர் மீது திணிப்பது கூடாது என்று குறிப்பிட்டு இருப்பதை உலகின் பல்வேறு நாடுகளில் வாழும் மொழியினர் ஆட்சிமொழி பற்றி சரியான கொள்கையை வகுத்துக்கொள்ள இலெனின் வழிகாட்டியுள்ளார்.



''உருசிய மன்னர் சாரின் கொடுமைகள் தாங்க முடியாத நிலையில் பல்வேறு தேசிய இனங்கள் பல ஆண்டு காலம் தாங்கிப் பொறுத்து வந்ததின் விளைவாக மன்னர் ஆட்சி முறையைப் பற்றியே மக்கள் வெறுப்புக் கொள்ளவேண்டிய தாயிற்று. அவரவர்களுடைய தாய்மொழியை உருசிய மக்கள் முழு உரிமையோடு பயன்படுத்த முடியாத சூழ்நிலையில் அல்லலுற்றுக் காலப்போக்கில் கல்வி அறிவு இல்லாத வர்களாகி விட்டார்கள். மன்னர் ஆட்சியில் தாய்மொழிப் பற்றுக் குறைந்துவிட்டது.



''மொழிகளைப் பொறுத்தமட்டில் அனைத்து மொழிகளுக்கும் சமநிலை இருக்கவேண்டும். ஒரு குறிப்பிட்ட மொழிகளை விடத் தனிப்பட்ட முறையில் உயர்ந்த நிலை பெற்றிருப்பது கேடு பயக்கும். நல்ல அரசு எல்லா மொழியினருக்கும் மொழி பெயர்ப்பாளர் மூலமாக அரசாங்கத்தின் நடவடிக்கைகளை அறிந்து கொள்ளக்கூடிய வாய்ப்பையும் வசதியையும் உண்டாக்கித் தரவேண்டும். இது மிகமிக இன்றியமையாதது. மொழியைப் பொறுத்தமட்டில் அனைத்து மொழிகளும் சமமாக

ஏற்கப்பட்டு அரசின் செயல்முறைகள் அமைத்திடவேண்டும்'' என்று இலெனின் குறுகிய எண்ணம் இல்லாமலும், எந்த ஒரு மொழி மீதும் வெறி உணர்வைக் கொண்டிருக்காமலும், உருசிய நாட்டில் உள்ள பல்வேறு மொழியினரின் சார்பாக எல்லோருடைய மொழிகளின் சமநிலைக்குப் போராடி இருப்பது கண்டு நாம் வியப்படையாமல் இருக்க இயலாது.

## சொற்களும் அதன் பொருளும்

''மதம் என்பது தனிப்பட்ட ஒருவரின் தனிச் செய்தி என்று சமன்மையர்கள் மதத்தைப் பற்றிக் கூறுகிறார்கள். இப்படிக் கூறும்போது பயன்படுத்தப்படும் சொற்களுக்குத் தெளிவான பொருள் என்ன என்பதை மக்களுக்குப் புகட்ட வேண்டும்,

அரசாங்கத்தைப் பொறுத்தமட்டில் மதம் தனிப்பட்ட ஒன்ருகக் கருதப்பட வேண்டும் என்று நாம் கூறுகிறோம். நமது கட்சியைப் பொறுத்தவரை நாம் மதம் ஒரு தனிப்பட்ட செய்தி என்றும் ஏற்றுக்கொள்ள முடியாது. மதத்திற்காக எந்த வித அக்கறையும் அரசாங்கம் எடுத்துக்கொள்ளக் கூடாது. மதச் சார்புடைய அமைப்புகளுக்கும் அரசுக்கும் எந்தவிதத் தொடர்பும் இருக்கக் கூடாது. எந்த ஒரு குடிமகனுக்கும் அவனவன் விருப்பப்படி மதத்தைப் பின்பற்ற உரிமை இருக்க வேண்டும். அதேபோல ஒரு குடிமகன் எந்த மதத்தையும் விரும்பவில்லை என்றால் அவன் கடவுளிலியாக இருக்கவும் உரிமை தரப்பட்டாக வேண்டும். அப்படி கடவுளிலியராக இருப்பவர்களே சமன்மையினர். மதத்தின் அடிப்படையில் மக்களிடையே வேற்றுமைகளை உண்டாக்குவது பொறுக்க முடியாததாகும் ''

என்று தெளிவாக மதச் சார்பற்ற அரசு எந்த ஒரு மதத்தையும் ஆதரிப்பதோ, மதத் தொடர்புகளில் தலையிடுவதோ கூடாது என்பதை இலெனின் கூறி இருக்கிறார்.

மதசார்பற்ற கொள்கையை விளக்கும்போது மக்களுக்குத் தெளிவாகப் புரியக்கூடிய சொற்களில், ஐயத்திற்கோ, அலக்கழிப்புக்கோ, அச்சத்திற்கோ இடமளிக்காத முறையில் விளக்கப்பட வேண்டும் என்கிறார்.

ஒரு குடிமகன் ஒரு மதத்தைச் சேர்ந்தவனாக இருந்தே ஆகவேண்டும் என்று வற்புறுத்தக் கூடாது. எந்த மதத்தையும் பின்பற்றாத கடவுளிலியாக இருப்பவனே சமன்மையன் என்று குறிப்பிட்டிருப்பது கடவுளிலியத்தைத் தடுக்க வேண்டும், தடை செய்ய வேண்டும் என்று மதவெறி பிடித்து அலைபவர்களுக்கு

இலெனின் கூறியிருக்கும் மதச்சார்பற்ற அரசின் கொள்கை யைப் புரிந்துகொள்வார்கள் என நம்புகிறோம்.
எப்படி ஒரு மனிதனுக்குப் பேச்சுரிமை, எழுத்துரிமை வேண்டும் என்று வலியுறுத்தப்படுகிறதோ அதேபோல எண்ண உரிமையும் இருக்க வேண்டியதன் இன்றியமையாமையையும் வற்புறுத்தி இருக்கிறார்.
சிந்தனையின் தொடர் எண்ணம். எண்ணத்தின் அடிப்படை யில் ஒரு குடிமகன் நன்கு ஆராய்ந்து, தனக்குக் கடவுள் நம்பிக்கை இல்லை என்று முடிவாகக் கூறவோ, தனக்கு எந்த மதமும் தேவை இல்லை என்று முடிவு செய்து செயல்படவோ உரிமை உண்டு என்பதை தெளிவுபடுத்தி இருக்கிறார்.
மதச்சார்பற்ற அரசு என்ற போலியான அறிக்கை செய்து கொண்டு, யார் யார் ஆட்சியில் இருக்கிறார்களோ, அவர்கள், தங்களுக்குப் பிடித்தமான மதத்திற்கு மட்டும் அரசின் துணை இருக்கும் வகையில் மறைமுகமாகவோ, நேரிடையாகவோ தெரிந்தும் தெரியாதவர்போல மதச்சார்பற்ற கொள்கையைக் கற்பழிக்கும் மதவாணர்கள், வெறியர்கள் - உண்மையான மதச்சார்பற்ற கொள்கையை இனியாவது புரிந்துக்கொண்டு, திருந்தி, நல்வழிப்பட இலெனின் கூறிய கருத்துகள் பயன்படும் என்று கருதுகிறோம்.



''உடோபியா - என்ற சொல் கிரேக்க மொழிச் சொல்.', உ என்றால் இல்லை என்று பொருள். 'டோபியா' என்றால் ஓர் இடம் என்பது பொருள். அதாவது இல்லாத ஓர் இடத்தைக் காணாத (கற்பனை உலகு) ஓர் இடத்தைப் புனைவு செய்து கொள்வதாகும்.
அரசியலில் உடோபியா என்ற சொல் வேறு வகையாக (நடை முறைக்கு ஒவ்வாத) பயன்படுத்தப்படுகிறது. அதாவது எது ஒன்று நடைபெறாதோ அதனைக் குறிக்கப் பயன்படுத்தப் படுகிறது. அதாவது மக்கள் சமூகத்திற்குப் பயன்படாத நிலை யைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது. பல்வேறு வகுப்பாற் றல்களுக்கும், வளர்ச்சி பெற்ற அரசியல் நிலைக்கும் இந்தச்

சொல் அப்பாற்பட்டது '' என்று இலெனின் கூறுகிறார். இது முற்றிலும் உண்மை.

ஒரு சொல்லின் தோற்றத்தையும், அதன் வரலாற்றுப் பின்னணியையும், அதன் பயனையும் இலெனின் எந்த அளவிற்கு ஆய்வு செய்திருக்கிறார் என்பதிலிருந்து நாம் அவரின் எண்ண ஆற்றலால் நன்கு புரிந்துகொள்ள இயலும்.



'' உரிமை என்கிற சொல் மிகமிக அழகான சொல். வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும் அதனை நாம் சந்திக்கிறோம். வாணிப உரிமை, விற்பனை உரிமை, தன்னையே கூட விற்பனை செய்துகொள்ளும் உரிமை என்பன போன்ற பல உரிமைகளைக் கண்டு வருகிறோம்.

மெத்தனக்காரர், சமன்மைப் புரட்சியாளர்கள், மற்றும் சில கயவர்கள், இந்த உரிமை என்ற சொல்லுக்கு உரிய அழகான பொருளைச் சிதைத்துத் திரித்துப் பேசி வருகின்றனர். அவர்கள் எல்லாம் குறுகிய நோக்கம் கொண்டவர்கள்; முதலாளிகளின் வைப்பாட்டிகள்; மக்களைப் பழமைக்கு இழுத்துச் செல்லும் பிற்போக்குவாணர்கள்'' என்று இலெனின் அரசியல் புரட்டர்களுக்கும், தரமற்ற செய்தித் தாள்களுக்கும் சூடு கொடுத்திருக்கிறார்.



சுரண்டும் வகுப்பைத் தவிர்த்துத் தொழிலாளர்கள் - உழைக்கும் உழவர்கள், தொழிலாளர்கள் மட்டுமே அதிகாரம் செலுத்தும், ஓர் அரசை முதன் முதலில் உருசியாவில் அமைத்திருக்கிறோம். இது உலக வரலாற்றில் இடம் பெற்றதாகும். அது தான் நமது சோவியத்து அரசு.

பலரின் தரக்குறைவான ஏசல்களுக்கிடையே நம் பாட்டாளி வகுப்பு முகவர்கள் பல நாடுகளில் பரவி உருசியாவின் சிறப்பை நிலை நாட்டிச் சோவியத்து அரசுக்கு சிறப்பைத் தேடித் தந்துள்ளனர்.

இப்போது '' சோவியத்து என்றால் எல்லோருக்கும் புரிகிறது. '' சோவியத்து '' என்ற வார்த்தையை வையகமே

வரவேற்கிறது. தொழிலாளர் அனைவருக்கும், 'சோவியத்து' என்ற சொல் கவர்ச்சியான சிறந்த சொல்லாகிவிட்டது'' என்று இலெனின் சோவியத்து அரசின் சிறப்பை எடுத்துக் கூறி யிருக்கிறார்.

'சோவியத்து' என்ற சொல்லையே இலெனின்தான் படைத்தார். அந்தச் சொல் பல எதிர்ப்புகளுக்கிடையே உலகப்புகழ் பெற்றது என்றால், அந்தச் சொல்லை எந்த அளவிற்குப் பொருள் நிரம்பியதாக படைத்திருக்கிறார் என்பது நமக்குப் புலப்படுகிறது. தம் இலட்சியத்திற்கு ஏற்றதாக அந்தச் சொல்லை உருவாக்கி, அதற்குப் பெருமையைத் தேடி, உலகறி சொல்லாக ஆக்கினார்.



''முதலாளியம் என்பது ஒரு சமுதாய அமைப்பு. இந்த அமைப்பில் நிலம் - தொழிற்சாலைகள் - கருவிகள் அனைத்தும் ஒரு சிறு கூட்டமே உரிமையாக்கிக் கொள்கிறது - நிலவுடைமையாளர் - முதலாளிகள்தாம் அதன் பலனை அடைகின்றனர். அதே நேரத்தில் பெருவாரியான நாட்டுமக்கள் எதையும் உரிமை பாராட்ட இயலாத நிலையிலோ அல்லது பொருட்படுத்த முடியாத அளவிற்குச் சிறுசிறு உடைமைகளைப் பெற்றிருக்கவோதான் முதலாளியம் வழி வகுக்கிறது. மொத்தத்தில் ஒரு சிலரின் வளமான வாழ்விற்காக உழைக்கும் தொழிலாளர் வகுப்பு, தங்களைக் கூலிகளாகவும் அடிமைகளாகவும் ஆக்கிக் கொண்டு வறுமையிலேயே வாழவேண்டி இருக்கிறது.''

என்று இலெனின் 'முதலாளிய'த்திற்கு எளிதில் எவரும் புரிந்துகொள்ளக் கூடிய முறையில் அரிய விளக்கம் தந்திருக்கிறார்.



''உடைமையை அரசு கைப்பற்றுவது என்றால், உடைமையாளருக்கு எந்தவித இழப்பீடும் தராமல் கைப்பற்றுவதுதான் உண்மையான பொருள்.''

இழப்பீடு கொடுத்து அரசு உடைமைகளைக் கைப்பற்றுவது மக்களுக்கு எதிரான செயல். நாட்டின் பொருளாதாரத்தை அது வளமாக்காது''

''நாட்டுடைமையாக்குவது என்றால் பயிர் நிலம் முழுவதையும் அரசுக்கு மாற்றி உரிமையாக்குவதாகும். அரசு உடைமை என்கிறபோது, நிலத்திற்கான வாடகையைப் பெற அரசுக்கு உரிமை உண்டு. அதற்கான சட்டங்களை உருவாக்கி; நாடு முழுவதும் நிலத்தைக் கொண்டு பயிரிட்டுப், பயன் பெறுபவர் களையும் அரசு கட்டுப்படுத்த விதிகளை உண்டாக்கும் செயல் பட அரசுக்கு அதிகாரம் உண்டு.''
என்று இலெனின் இழப்பீடு கொடுத்து உடைமையைக் கைப்பற்றும் அரசுமுறைக்கு எதிர்ப்புக் காட்டியிருக்கிறார்.



'மிரட்டுப்பறி' அச்சுறுத்திப் பணம் பறிப்பது என்ற சொல்லுக்கு உரிய பொருள் இதுதான். ஒரு குறிப்பிட்ட உண்மைகளை வெளிப்படுத்தி விடுவேன் என்றோ, அல்லது கற்பனைக் கதைகளைக் கூறித் தீங்கு உண்டாக்குவேன் என்றோ பயமுறுத்தி, வெளியிடாமல் இருக்கப் பணம்கேட்டு அச்சுறுத்திப் பெறும் செயலுக்குதான் 'பிளாக்மெயில்' என்பதற்குப் பொருள் ஆகும்.
''ஒரு தனிப்பட்ட மனிதனுக்குப் பிடிக்காததை, அவனைப் பாதிக்கக் கூடியதை, அவனுக்குத் துன்பம் உண்டாக்கக் கூடியதைச் செய்வது 'மிரட்டுப்பறி'!
'அரசியல் மிரட்டுப்பறி(பிளாக் மெயல்)' என்பது வெளிப்படுத்தி விடுவேன் என்று அச்சுறுத்தல் மட்டுமல்ல—வெளிப்படுத் தியதைத் தொடராமல் நிறுத்திக் கொள்ளவும்-பேரம் பேசிப் பணம் பறிப்பதாகும். ஓர் அரசியல் எதிரியைப் பற்றி தவறான எண்ணத்தை உண்டாக்கி, மேலும் அவன் அரசியலில் செயல் பட முடியாத அளவிற்கு நிலமையை உண்டாக்குவதும், அரசியல் அச்சுறுத்தல்தான்''
என இலெனின் அரசியலில் எப்படிப்பட்ட எதிர்ப்புகளைச் சந்திக்க நேரிடும் என்பதையும், எப்படி அரசியலில் சூழச்சிக் காரர்கள் திருவிளையாடல்களில் ஈடுபடுகிறார்கள் என்பதையும் மொழி நுட்பத்துடன் தெளிவு படுத்தி இருக்கிறார்.



''தன்னுரிமை - என்றால் அதில் பலருக்கும் பல்வேறு குழப்பங்கள் ஏற்படுகின்றன. பலர் தவறாகப் புரிந்துக்கொள்வது தான் இதற்குக் காரணம். எனவேதான் 'தன்னுரிமை' என்பதற்குப் மாறாக, 'பிரிந்துபோகும் உரிமை' என்று தெளிவாகக் கூறவேண்டும் என்கிறேன். 1917-ஆம் ஆண்டில் ஆறு மாதங்கள் நாம் பெற்ற பட்டறிவை நினைத்துப் பார்க்கும் போது பிரிந்துபோகும் உரிமையைப் பின்லாந்து, உக்ரைன், அர்மேனியா, போன்ற பல ஒடுக்கப்பட்ட இன மக்களுக்குத் தந்தாகவேண்டும். நாம் புரட்சியில் வெற்றி பெற்று ஆட்சியைக் கைப்பற்றிய உடன் பிரிந்து போக விரும்புகிறவர்களுக்கு அந்த உரிமையை அளிப்போம்; அதே நேரத்தில் நம் கட்சியின் கொள்கை பிரிந்து போவதை நாமே ஊக்குவிப்பதன்று''

''சோவியத்து அமைப்பு-என்பது சுரண்டப்பட்டுவந்த மக்களின் அமைப்பு. உழைக்கும் பாட்டாளி மக்களின் அமைப்பு. அவர்கள் அரசை அனைத்து வகைகளிலும் இயங்குவதற்கு உதவி புரிகிறார்கள். அரசு தொழிலாளர்கள்-சுரண்டப் பட்டவர்களின் பாதுகாவலனாக இயங்குகிறது. மக்கள் உரியவர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்கள் சீராக இயங்குகிறவர்களா என்பதை மேற்பார்வையிட சோவியத்து அமைப்பு வழிகாட்டுகிறது. தொழிலாளர்களையும், சுரண்டப்பட்டுவந்த மக்களையும், ஏழைப் பாட்டாளி மக்களையும் ஒன்றுபடுத்தி அவர்களுக்கு நல்வாழ்வு தருவதே சோவியத்து அமைப்பு.''

''அன்புள்ள வரலாற்று ஆசிரியர்களே, அரசியல்வாதிகளே! 'எதிர்ப்பாளர்' என்கிற சொல்லுக்குரிய பொருளை நீங்கள் அறியவேண்டும் என்று கேட்டுக்கொள்வதில் தவறில்லை என்று கருதுகிறேன்.

''அமைதியை நாடி, பாராளுமன்ற முறையில் சிக்கல்களுக்குத் தீர்வுகாண்பதே எதிர்க்கட்சியினரின் பணியாகும். அதாவது, இதற்குப் புரட்சிக்கான தேவை ஏதும் நாட்டில் இல்லாதிருக்க வேண்டும். புரட்சியின்போது இழிவான எதிரிக்கு எதிராக மக்கள் கிளர்ச்சி செய்ய வேண்டி இருக்கிறது. மேலும் பிற்போக்கு ஆற்றல்களையும் முறியடிக்கவேண்டிய நிலை புரட்சியின் போதும் தேவையாகிறது.

''நாம் நம்மைப் பொதுவுடைமையர் என்று கூறிக்கொள்கிறோம். 'பொதுவுடைமையர்' என்றால் யார்? பொதுவுடைமை என்பது இலத்தீன் மொழியைச் சேர்ந்த சொல். அந்தச் சொல்லுக்குப் 'பொது' என்று பொருள்படும். தொழிற்சாலைகளும், மற்றும் உள்ள அனைத்தும் பொதுவாக மக்களுக்கே உரிமை. பொது நோக்கத்துடனே மக்கள் உழைக்க வேண்டி இருக்கிறது. அதுதான் பொதுவுடைமை''
என்று இலெனின் தன்னுரிமை, சோவியத்து அமைப்பு, எதிர்ப்புத் தன்மை ஆகிய சொற்களுக்கு உரிய பொருள்களைத் தெளிவாக விளக்கி இருக்கிறார்.
உழைப்பின் பயன் முழுவதையும் மக்களே நுகர்கின்ற நல்ல நோக்கம் பொதுவுடைமைவாணர்க்கு மட்டுமே உண்டு என்பது நாம் அறிகிறோம்.



''உக்லான் - என்பது உருசிய மொழிச் சொல். சொற்களைத் தேர்ந்தெடுப்பதில் நான் மிகவும் விழிப்பாக இருப்பவன் என்பது மிகைப்படுத்திக் கூறுவது அன்று. சரியான பாதையில் இருந்துவிட்டு விலகிச் செல்வது இப்போது ஓரளவிற்குத் தலை எடுத்திருக்கிறது. பாதையை விட்டு விலகும் போக்குச் சீர்படுத்தக் கூடியதே. தவறியவர்களை நாம் திருத்தமுடியும் என்பது என் கருத்து. இதைத் தெளிவுபடுத்தும் நல்ல சொல் தான் 'உக்லான்' (தன்னுணர்வு). எதையும் மாற்ற இயலாதது இல்லை என்பதை உணர்த்துவதே இந்தச் சொல். எதையும் திருத்திச் சரி செய்யலாம் என்கிற நம்பிக்கை தருவதே இந்த சொல்லின் பொருள். முறையாக எச்சரித்துக் கொள்கையின் முழுமையான விளக்கம் தந்து, பிழை செய்பவர்களைத் திருத்திச் சரி செய்யலாம். முயன்றால் முடியாததில்லை.''
''சலுகை'' என்றால் என்ன? விளைவிப்பை அதிகரிக்க அதிகார வகுப்பு முதலாளிகளுடன் கலந்து பேசி செய்துகொள்ளும் உடன்பாடுதான், சலுகை என்பது. அந்த உடன்பாட்டின் மூலம் முதலாளிகள் அடிக்கும் கொள்ளையில், அரசு ஒரு பங்கு பெறுவதுதான் 'சலுகை'. அரசு அடையும் பங்கு போக மீதி முழுவதையும் முதலாளிகள் மட்டுமே "அடைகிறார்கள்'' என்று

சொற்களின் நடைமுறையில் விளைவிக்கும் விளைவுகளையும் எடுத்துக் காட்டியிருக்கிருர்.

என்று இலெனின் உருகிய மொழியில் உள்ள சொற்களின் முழுமையான பொருளை மற்றவர்களுக்குத் தெரிவித்து இருப்பதைக் காண்கிறேம். அவர் எந்த அளவுக்கு உருசிய மொழி மீது பற்றுக்கொண்டு, அந்த மொழிவளர்ச்சிக்கு ஆக்கப் பணிபுரிந்திருக்கிருர்!

ஒவ்வொரு சொல்லுக்கும் உண்மையான பொருள் என்ன என்பதை இலெனின் கண்டறிந்து, பல்வேறு மொழிகளில் உள்ள சொற்களின் பொருளையும் ஆய்வுசெய்து, எந்தச் சொல்லுக்கும் சரியான பொருளை மக்களுக்குப் புரியும்படி கூறி இருப்பது உண்மையில் அவருடைய அறிவாற்றலைக் காட்டுகின்றது.

பெரிய புரட்சியில் ஈடுபட்டுத் தலைமை ஏற்ற இலெனின் இந்த அளவிற்கு மொழிவல்லுனராகவும், கருத்தாளராகவும் விளங்கி இருப்பதைக் கண்டு நாம் வியப்படையாதிருக்க இயலாது.



## எழுதும் வகையும், விதிமுறையும்

''எந்த நோக்கத்திற்காக இந்தச் சொல் பயன்படுத்தப் படுகிறது, எந்தக் காரணத்திற்காக இந்தக் கடுமையான சொல் எடுத்தாளப் படுகிறது என்பதை எல்லாம் தெளிவாகவோ, குறிப்பாகவோ, விளங்காத நிலையில், எதிரிகளைக் குறை கூறவும், அவர்களின் செல்வாக்கைக் குறைக்கவும் இழி சொற்கள் பயன்படுத்தப் படுகின்றன.

எதிரிகளை வீழ்த்த வேறு வழி இல்லாதபோது, இந்த முறை இறுதியாகக் கையாளப்படுகிறது என்பது தெளிவு''

என்று இலெனின் தரக்குறைவான அரசியல்வாதிகள் எப்படி எல்லாம் தங்கள் எதிரிகளை முறியடிக்க முற்படக்கூடும் என்பதை விளக்கி இருக்கிறார்.



''எந்த ஒரு நூல் ஆசிரியரின் நடையும் மேன்மையற்றதாகவோ, எண்ணங்கள் தெளிவற்றுப் புகை கப்பியது போலவோ அமையக் கூடாது.''



''ஒரு தீர்மானம் தெளிவாகவும் பயன்படுத்தப்படும் மொழியில் பிழை எதுவும் இல்லாமலும் எழுதப்பட வேண்டும். அரசியலில் காணப்படும் பல்வேறு போக்குகளையும் கருத்தில் கொண்டு எழுதப்பட வேண்டும். ஏதோ ஒரு சிலரின் கருத்தை, நல்ல எண்ணத்தை மட்டும் வெளிப்படுத்தும் முறையில் தீர்மானம் எழுதப்படக் கூடாது.''

என இலெனின் எல்லோருக்கும் பொதுவாகத் தீர்மானங்களை எழுதும் போது கடைபிடிக்க வேண்டிய முறையை விளக்கி இருக்கிறார். ஒரு சிலரின் கருத்து மட்டுமே எதிரொலிக்கின்ற முறையில் தீர்மானங்கள் எழுதப்படக் கூடாது என்பதையும் நல்ல நோக்கத்துடன் எடுத்துக் கூறியிருக்கிறார்.



''எனக்கு ஒரு கதை நினைவுக்கு வருகிறது. அதுவும் ஓர் அறிமுகமில்லாதவனைப் பற்றியதாகும். கடந்த காலத்தில் சில மெய்மையினர் எதைப்பற்றியோ கலந்துரையாடிக்கொண்டு

இருந்தனராம், அப்போது அவர்களுக்கு முன்பின் அறிமுக மில்லாத ஒருவன் அங்கு வந்தானாம். அவர்கள் பேசிக்கொண் டிருந்தபொது அவன் வாய்திறக்காமல் அமைதியாக இருந் தானாம். அந்த மெய்மையினரில் ஒருவன் அவனைப் பார்த்து நீ அறிவாளன் என்றால், நீ மிகவும் முட்டாள்தனமாக நடந்து கொள்கிறாய். நீ ஒரு முட்டாள்தான் என்றால், நீ மிகவும் அறிவாளனாக நடந்துகொள்கிருய்'' என்று கூறினுர்.
இந்தக் கதையை இலெனின் நினைவுப் படுத்திக் கூறியிருப் பதைப் பார்க்கும்போது அவர் யார் உண்மையான முட்டாள் என்பதை எவ்வளவு நயமாகக் கூறி இருக்கிருர் என்பது தெளி வாகிறது.



''திரு. பிளகானோவ் பேசும்போது அழகாகப் பேசுகிறார். மிக வேடிக்கையாகப் பேசுகிறார். கவர்ச்சியாகப் பேசுகிறார். இது யாரும் மறுக்க முடியாது. ஆனால், அவருடைய பேச்சு முழுவதையும், அப்படியே எழுதி ஆராயும்போது, அதுவும் மெய்மைய முறையில் ஆய்வு செய்யும்போது தான் இடர்ப்பாடு ஏற்படுகிறது.''
என்று இலெனின் சொற்பொழிவாளர்கள் அழகாக, கவர்ச்சி யாகப் பேசிவிட்டால் மட்டும் போதாது, அந்தப் பேச்சை நேரில் கேட்க முடியாதவர்களுக்கும், பிற்காலத்தில் படிப்பவர்களுக்கும் பயன் உள்ள முறையில் அமைந்திருக்க வேண்டும் என்பதை நாகரிகமாகச் சுட்டிக்காட்டி இருக்கிறார்.



''குடியரசைப் பற்றிப் பேசும் சொற்பொழிவாளர்கள், 'குடியரசு' பற்றி எப்படிப் பேசுவது என்பதைத் தெரிந்துதான் பேசவேண்டும். ஏதோ ஒரு கூட்டத்தில் பேசுவது போலவும் தொழிற்சாலைகளில் பணியாற்றும் தொழிலாளர்களிடையே பேசுவது போலவும், மக்களிடையே பேசுவது போலவும், மாணவர் இடையில் பேசுவது போலவும், மிக மிகப் பொது முறையாகக், 'குடியரசைப்' பற்றிப் பேசக்கூடாது. ஒருவன் கொள்கைப் பரப்பாளனானாலும், கிளர்ச்சிக்காரன் என்றா லும், அவன் பேசும் பாணியை உயர்ந்ததாக அமைத்து,

கேட்பவர்கள் மனத்தைக் கவரும் முறையில், உண்மைகளை மிகத் தெளிவாகக் கூறவேண்டிய முறையில் கூறவேண்டும். பேச்சைக் கேட்பவர்கள் மனநிறைவு கொள்ளும் வகையில் பேசவேண்டும். மிகப் பெரிய பொருண்மைகளை, அவர்கள் புரிந்துக் கொள்ளும் நடையில் பேசவேண்டும்.''

என இலெனின் பேச்சாளர்களின் பொறுப்பை எடுத்துக்காட்டி இருக்கிறார். எதைப்பற்றிப் பேசுகிறோமோ, அதைப்பற்றி ஆராய்ந்து, அதனைக் கேட்பவர்கள் புரிந்துகொள்ளும் முறையில் பேசவேண்டும் என்று மேடைப் பேச்சாளர்களுக்கு அறிவுரை கூறுகிறார்.

மிகப் பெரிய சிறப்பான பொருண்மைகளைப் பொறுப்பற்ற முறையில், ஏனோதானோ என்று பேசுவது மேடைப் பேச்சாளர்களுக்கு அழகாகுமா?

பேசும் பொருளைப்பற்றி பல்வேறு செய்திகளைத் தெரிந்து கொண்டால்தான் அந்தக் கடமையைப் பேச்சாளர் நிறைவேற்ற முடியும் என்பதை உணர்வது நல்லது.



''உலகம் என்பது நடுநிலக் (மெடரேனியன்) கடல் சார்ந்த பகுதியில் இருந்த நாடுகளைக் கொண்டதாக 'ஓமர்' தெரிவித் திருக்கிறார். எகிப்தியர் நிலவின் நடமாட்டத்தையும், கோள் சுழற்சியையும் ஆராய முற்பட்டனர் என்றும் கூறுகிறார்.

ஒரு திங்களுக்கு 30 நாள்கள், ஓர் ஆண்டுக்கு 360 நாள்கள் என்றும் கூறுகிறார். எகிப்திய மக்கள் ஏற்கனவே ஆண்டுக்கு 365 நாள்கள் கொண்டிருந்தனர். அவர்கள் நிலத்தின் சுற்றளவு 40,000 கி. மீ. மாற்றலாக 45,000 கி. மீ. என்று கொண்டிருந்தனர் !

அரிஸ்டாரகசு நிலவு நிலத்தைவிட 40 மடங்கு சிறியது என்ற கருத்தை மாற்றி 30 மடங்கு என்று கூறினார். நிலத்தைவிட ஞாயிறு 300 மடங்கு பெரியது என்றார்!

இப்படிப்பட்ட தகவல்கள் கொண்ட நூல் உருசியாவில் காணப் படவில்லை. வேறு எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை.

இருப்பினும் இவை மெய்ப்பொருட்குப் பயன் படலாமே தவிர

மக்களுக்குப்ப யன்படும் அருஞ்செயல்களுக்கு இந்தத் தகவல்கள் பயன்படா.''

என இலெனின் குறிப்பிடுகிறார். சான்றுகள் எப்படிப்பட்டவையாக இருக்கவேண்டும் என்பதையும், எப்படிப்பட்ட சான்றுகள் தரப்பட்டால் மக்கள் நம்பவேண்டும் என்பதையும் கோடிட்டுக் காட்டுகிறார்.



'' மக்களிடம் பேசும்போது இலத்தீன் மொழிச் சொற்களை நீக்கி எளிதாகப் புரியும்படியான சொற்களைப் பயன்படுத்த வேண்டும் '' என்று இலெனின் ஒரு மொழியில் பிறமொழி சொற்களைப் பயன்படுத்தும் செயலைக் கண்டித்து, உருசிய மக்களுக்குத் தங்கள் மொழி மீது பற்றுதல் இருக்கவேண்டும் என்பதை வலியுறுத்திக் காட்டுகிறார்.

*தாய் மொழியில் உள்ள சொற்கள் மக்கள் எல்லோரும் புரிந்துக் கொள்வதற்கு எளிதானது என்பது அவரின் கருத்து.*

*''மேடைப் பேச்சாளர் தமக்குப் பிறமொழிகளும் தெரியும் என் பதை காட்டிக்கொள்ள மட்டுமே பிறமொழிச் சொற்கள் பயன்* தருமே ஒழிய அந்தப் பேச்சின் மூலம் மக்கள் பேச்சின் கருத்தை முழுமையாகக் கண்டுகொள்ள இயலாது என்பதை நாம் உணர வேண்டும்.

மேலும் சொற்பொழிவுத்துறையில் ஈடுபட்டிருப்பவர்கள் தங்கள் நடையை எளிதாக அமைத்துக்கொண்டால் எந்தக் கருத்தையும் மக்கள் மனத்தில் பதிய வைத்துவிட இயலும் என்பதை புரிந்துகொள்ள வேண்டும்.

''ஒரு நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளியின் பேச்சு என்னை மிகவும் கவர்ந்தது. அவன் பேசிய பேச்சு உள்ளத்தைத் தொடுவதாக, உணர்ச்சி நிறைவுடன் இருந்தது. அதற்கு ஒரு சிறப்புக் காரணம், அவன் எந்த ஏட்டையும் படித்தவன் அல்லன். புத்தகங்களைப் படித்து அவன் பேசவில்லை.

இருந்தும் அவனால் புரட்சியை எப்படி உண்டாக்க முடிந்தது என்பதை மிக அழகாக எடுத்துக் கூறினான்''

என்று ஒரு நிகழ்ச்சியை நினைவு கூர்ந்து, எவரும் நன்கு சிந்தித்தால், எதனையும் தன் சொந்த நடையிலேயே தெளி

வாக எடுத்துக் கூற முடியும் என்பதை அறிவுறுத்தி யிருக்கிறார் இலெனின்.



''முதலாளிகளின் நன்மைக்காகவே, முதலாளிகள் போர்களை உண்டாக்குகிறார்கள் என்கிற உண்மையை மார்க்சியவாணர் நன்கு உணர்ந்துள்ளனர். அதையே அவர்கள் கூறிக்கொண்டு இருக்கவேண்டியதில்லை. ஆனால் அதை எடுத்துச்சொல்வதில் ஈடுபட்டிருப்பவர்கள், கிளர்ச்சிகளில் நாட்டம் கொண்டவர்கள், இந்த உண்மையைப் பொதுமக்களுக்குப் புரியும்படியாக எடுத்துக் கூறவேண்டும். அதற்கும் வேற்றுமொழிச் சொற்களைப் பயன்படுத்தக்கூடாது ஏன் என்றால் கலந்து உரையாடுவதன் விளைவு வெறும் வெட்டிப் பேச்சாகப் பயன் அற்றுப் போகக் கூடாது.''

''தொழிலாளர்களின் பகராளி (பிரதிநிதி) களாகவோ, உழவர்களின் பகராளிகளாகவோ, புரட்சியில் ஈடுபாடு கொள்கிறவர்கள் ஒரே குறிக்கோளுடன் செயல்படவேண்டும். வெற்றி என்பதே அவர்களின் குறிக்கோளாக இருக்கவேண்டும். ஒவ்வொருவரும் மிகவும் பின்தங்கிய மக்களைக் கண்டு, உள்ள நிலைமையை முழுமையாகவும், தெளிவாகவும், விளங்கிக் கொள்ளக் கூடிய மொழியில் பேசவேண்டும் தொழிலாளியின் நிலையைப் பாடுபடும் பாட்டாளியின் நிலையை மையமாகக் கொண்டு மக்கள் தொடர்பு ஏற்படுத்த வேண்டும். மக்களின் தொல்லைகள் அகல வழிகாண வேண்டும். தயக்கம் காட்டுபவர்களுக்குத் தெளிவை உண்டாக்கி, எப்படிப் புரட்சியில் பங்குகொள்ள வேண்டும் என்கிற வழிமுறைகளைக் கூறி, அவர்களின் சோம்பலை, மெத்தனப் போக்கை நீக்க வேண்டும்.

அவர்களுக்கு எதிராக நடைபெறுகின்ற சூழ்ச்சிகளை விளக்கி, அவர்களை என்றும் ஏமாற்ற நினைப்பவர்களிடமிருந்து மீட்க வேண்டும். யார் யார் அவர்களுக்கு இரண்டகம் புரிய முற்பட்டு உள்ளனர் என்பதையும் உணர்த்த வேண்டும்.''

புரட்சியின் பெறற்கரும் வெற்றிக்காக அவர் ஒவ்வொரு கட்டத்திலும் எவ்வளவு அக்கறை காட்டிச் சிந்தித்துச் செயல்பட்டிருக்

கிறார் என்பதை நினைக்கும் போது, அவரது தலைமையின் சிறப்பைக் கண்டுகொள்ள முடிகிறது.



'' முதலாளிய அமைப்பில் செய்தித் தாள்கள் முதலாளிகளால் நடத்தப்படுகின்றன. அதனால் முதலாளிகளின் நலம் பாது காக்கப்பட்டு, அவர்கள் பயன் அடைகிறார்கள். பணம் குவித்துக் கொள்கிறார்கள். செய்தி நிறுவனங்கள் அவர் களுக்கு வேண்டிய தகவல்களைத் திரட்டித் தருகின்றன. முதலாளிகள் ஏற்கும் முறையில் அந்த ஏடுகள் நடத்தப் படுகின்றன. அதுமட்டுமில்லை இப்படிப்பட்ட செய்தித் தாள்கள் உழைக்கும் பாட்டாளி மக்களை ஏமாற்றவும், தொழி லாளர்களுக்கு எதிராகவும் நடத்தப்படுகின்றன.

நாம் முதலாளிகள் இப்படி ஆதாயம் சம்பாதிப்பதை முறியடித்து விட்டோம். மேலும் தொழிலாளர்களை வஞ்சிக்கும் நிலைக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டோம். மக்களுக்குக் கல்வி புகட்டும் சிறந்த கருவிகளாக அந்தச் செய்தித் தாள்களை மாற்றி விட்டோம். மக்கள் எப்படி வாழவேண்டும், அவர்களின் பொருளாதாரம் முதலாளிகளை நம்பியோ, நிலக்கிழார்களின் தயவிலோ இல்லாத அளவிற்கு மாற்றங்களைச் செய்யத் தொடங்கிவிட்டோம். ஆனால் அந்த வேலை இப்போதுதான் தொடங்கப் பட்டிருக்கிறது. கடந்த காலத்தில் நாம் மிகுதி யாகச் செயலாற்றி விட்டதாகக் கூறுவதற்கு இல்லை. ஆற்ற வேண்டியவை ஏராளமாகக் குவிந்திருக்கின்றன. நமது பயணம் பெரியது, மிகவும் நெடியது. அரசியல் கவர்ச்சிகளை ஓர் அளவிற்கு குறைத்துக் கொண்டு, வாக்காடல்களையும் குறைத்துக்கொண்டு செயல்படவேண்டும். பொதுவுடைமை மெய்மைகளை முழுமையாகப் புரிந்து கொள்ளாத பொது வுடைமையர் எழுப்பும் முழக்கங்களையும் குறைத்துக்கொண்டு, விளைப்பினைப் பெருகவேண்டும் என்கிற ஒரே குறிக்கோளைப் பற்றி நாம் இப்போது கருத்துப் பரப்பலைத் தீவிரப்படுத்த வேண்டும். அனைத்திற்கும் மேலாக நாம் பெற்றுள்ள நுகரறிவு முழுவதையும் திறமையுடன் பயன் படுத்தி மக்களின் முன்னேற் றத்திற்குப் பாடுபட வேண்டும்.''

என இலெனனின் முதலாளிகள் நடத்தும் செய்தித் தாள்களி னால் மக்களுக்கு ஏற்பட்டுவரும் இழப்பையும், முதலாளிகள் பெறும் கொள்ளை ஆதாயத்தையும் அழகாக விளக்கி இருக் கிறார்.

மேலும், எந்தச் சிக்கலை எப்போது வலியுறுத்திப்பேசவேண்டும் செய்யவேண்டும் என்பதையும் தெளிவுபடுத்தி இருக்கிறார்.

''நாம் உருசிய மொழியைக் கெடுத்துக் கொண்டு வருகிறோம். தேவையில்லாமல் வேற்று மொழிச் சொற்களைப் பயன் படுத்தி வருகிறோம். மேலும்அந்தச் சொற்களைக்கூடச் சரியாகப் பயன் படுத்துவதில்லை. அந்த வேற்றுமொழிச் சொல்லுக்கு ஈடாக அதே பொருளைக்கொண்ட சொற்கள் நமது உருசிய மொழியில் இருந்தும் கூட பலர் அதனைப் பயன்படுத்துவது இல்லை.

''புதிதாக ஒருவன் படிக்கக் கற்றுக்கொண்டால் அதிலும் குறிப் பாகச் செய்தித் தாள்களைப் படிக்கக் கற்றுக் கொண்டால் அவன் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் ஏட்டாளரின் நடையை, அவர்கள் பயன் படுத்தும் சொற்களைத் தெரிந்து கொள்ள வேண்டியதாகிறது. வேற்றுமொழிச் சொற்களால் செய்தி ஏட்டின் மொழி கெடுக்கப்படுகிறது. புதிதாகப் படிக்கத் தெரிந்து கொண்டவன் பிறமொழிச் சொற்களைப் படிப்பதின் மூலம் மகிழ்ச்சி கொள்ளலாம். ஆனால், அது அவனுடைய குற்றமில்லை. அந்தக் குற்றத்துக்குக் காரணமாக இருக்கும் எழுத்தாளனை மன்னிக்க முடியாது. இப்படி வேற்றுமொழிச் சொற்களைத் தேவையில்லாமல் கையாளுவதை எதிர்த்து நாம் போராட வேண்டும்?

''வேற்றுமொழிச் சொற்களைத் தேவையில்லாமல் பயன்படுத் தப்பட்டு வருவதைக் கண்டு நான் மிகவும் மனம் நோகிறேன். அதிலும் சில ஏடுகளில் தவறுதலாகக் பயன்படுத்துவது எனக்குச் சீற்றத்தை ஏற்படுத்துகிறது. இதனால் உருசிய மொழி சிதைவு அடைகிறது; எனவே உருசிய மொழியைக் கெடுப்பவர்கள் மீது போர் தொடுக்க நேரம் வந்துவிட்டது என்று நான் கருதுகிறேன்.''

இலெனின் தாய்மொழிப் பற்றுடன் உண்மைகளை எடுத் துரைத்திருப்பது காண வியப்பாகப் பலர்க்குப் புலப்படும். அவர்

பல மொழிகலைப்பயின்று பன்மொழி வாணராகத் திகழ்ந்தும் கூடத்தாம் பெற்ற அறிவை தம் மக்களுக்குத் தம்முடைய மொழி யிலேயே உள்ள வளமான சொற்களின் மூலம் வளமாகத் தெளிவு படுத்தவேண்டும் என்று உறுதியுடன் இருந்தார். பிறமொழிச் சொற்களைத் தவறுதலாகப் பயன்படுத்துவது கண்டு அவர் மிகவும் அல்லல்பட்டது உள்ளபடியே முறையாகும். அவருடைய தாய்மொழி பிற மொழிகளின் மூலம் எந்த அள விற்கு வளர்ச்சி பெறாமல் சிதைவுறுகிறது என்பதைப் பல இடங்களில் நன்கு எடுத்துக்காட்டி இருக்கிருர்.

''மார்க்சும் ஏங்கல்சும் உருசிய மொழியைப் பயின்றவர்கள். பல உருசிய நூல்களைப்படித்தவர்கள். உருசிய நாட்டின் வளர்ச் சியில் அக்கறை கொண்டவர்கள். உருசியப் புரட்சி இயக்கத்தின் நடவடிக்கைகளைத் தொடர்ந்து உற்று நோக்கிப் புரட்சிய ரோடும் தொடர்ந்து தொடர்பு கொண்டிருந்தர்கள். தொடக் கத்தில் குடியரசு வாணர்களாக இருந்தவர்கள்; பிறகு சமன்மை வாணர்கள் ஆனவர்கள். அரசியல் கொடுங்கோன்மையை உணர்ந்து வெறுத்து மனமாற்றம் கொண்டவர்கள். அதனுல் தான் சாரின்ஆட்சியை எதிர்த்து உருசியப் புரட்சியாளர்கள் ஒரு சிலர் மட்டுமே தொடங்கியே வீறு மிக்க போராட்டம் அவர்கள் நெஞ்சங்களில் பரிவினை உண்டாக்கியது'' என்று இலெனின் குறிப்பிடுகிருர்.

உருசியப் புரட்சியின் வெற்றிக்கு உருசிய மொழியும், உருகிய நூல்களும் எந்த அளவிற்கு வலிவோடு பயன் பட்டிருக்கின்றன என்பதை நாம் அறிகிறோம். புரட்சியாளர்களுக்குத் தாய்மொழி ஒரு பெரிய ஆற்றல் வாய்ந்த படைக்கலமாகும்.



''எல்லா நாடுகட்கான பணியில் மிகவும் கடுமையாக உழைத்த தின் விளைவாக மார்க்சு உடல்தலம் குன்றிய நிலையும் கூட எழுத்துப் பணியில் அவர் மேலும் தீவிரமாக ஈடுபட்டிருந்தார். அரசியல் பொருளாதாரத்தை எப்படி மாற்றி அமைப்பது என்ற அடிப்படை நோக்கில் பல்வேறு மொழிகளைப்படித்து அவற்றில் இருந்து ஏராளமான விளக்கங்களைத் தொகுத்தார். அவருக்கு உருசிய மொழியும் துணையாக இருந்தது. இருப்பினும் அவர்

பிரெஞ்சு, ஆங்கில நாடுகளிலேயே வாழ்ந்தாலும், நம் தாய் மொழி செருமன் மொழியிலேயே 'முதலீடு' (காப்பிடல்) என்ற நூலை முழுமையாக எழுதிமுடிக்க இயலாமல் பெரும் பகுதியை எழுதினார்''

மேற்கண்ட தகவலிலிருந்து மார்க்சின் உழைப்பைப் பற்றி தெரிந்து கொள்வதோடு பலமொழிகளைப் படித்து வேண்டிய தகவல்களைத் தேனீபோலத் தொகுத்து அயராத உழைப்பை ஆற்றலை நாம் காணலாம். மார்க்சு ஆழ்ந்த அக்கறையுடன் கற்ற மொழிகளில் உருசிய மொழியும் ஒன்று என்பதால் அம் மொழி எந்த அளவிற்குச் சிறப்பான மொழி என்பதனை அறி கிறோம்.

''உலகின் முன்னேறிய நாடுகளில் வாழும் ஏழைத் தொழிலாளர் வகுப்புதான் இறுதிவெற்றிபெறும் என்பது நமக்குத் தெரிகிறது. நாம் நம்முடைய பணியைத் தொடங்கி விட்டோம், இதே போன்று பிரிட்டனிலும், பிரான்சிலும், செருமனியிலும் தொழி லாளர் வகுப்பு ஒன்றுபட்டுப்பலம் பொருந்தியதாக அமையும். ஆனல் அவர்கள் வெற்றி பெற வேண்டுமேயானல் குடியேற்ற நாடுகளால் ஒடுக்கப்பட்டுக் கிடக்கும் தொழிளாளர் வகுப்பின் உதவியுடன் தான் வெற்றி பெறமுடியும். பொதுவுடைமை மாற்றம் ஏற்பட இது மிக இன்றியமையாதது. தொழிலாளர் புரட்சிப் பணிக்கு ஈடுபடுத்த வேண்டும். அவர்களே போராடக் கூடிய நிலையில் அமைப்புகளை உருவாக்க வேண்டும். பொது வுடைமைக் கொள்கைகளை அவரவர்கள் மொழிகளிலேயே மொழி பெயர்த்துப் பரப்ப வேண்டும். இது மிகத் தேவையான ஒன்று'' என்று இலெனின் உலகத் தொழிலாளர் வகுப்புதான் வெற்றி பெற்று நல்லாட்சியை அமைக்க வேண்டும் என்பதைத் தெளிவு படுத்துவதோடு, பொதுவுடைமைக் கொள்கைகளை அவரவர், அந்தந்த நாடுகளில், அவரவர் தாய் மொழியிலேயே தெரிந்து கொள்ளவேண்டும் என்று நல்ல வழிமுறையைக் காட்டியிருக்கிறார்.



''பழைய முதலாளிய சமுதாயத்தை மாற்றி இந்தத் தலைமுறை யினருக்குப் புதிய ஒரு சமுதாயத்தை உருவாக்குவதன் குறிக்

கோள் பழைய முறைகளை அப்படியே கையாள முடியாது. பயிற்றுவிப்பதும் பயிற்சியும் கல்வியும் இந்தக்கால இளைஞர் களுக்குப் புதியமுறையில் அளிக்கப் படவேண்டும். நாம் பட்டறி வின் மூலம் பெற்றுள்ள கூட்டறிவைக்கொண்டு அமைப்புகளை உருவாக்கி அவற்றின் மூலம் மாந்த ஆற்றலை ஊக்குவித்துச் செல்வதின் மூலமே வெற்றியைக் காணமுடியும். அப்போது தான் பொதுவுடைமைச் சமுதாயத்தை நாம் உருவாக்க முடியும்.''



''நல்ல முறையில் போதிய வளர்ச்சி பெறாத நாட்டில் நாம் ஓட்டமும் பிடியுமாய்ச் சமன்மையை விரைவாகத் திணிப்பதாக நம் எதிரிகள் அடிக்கடி குற்றம் சாட்டுகிறார்கள். நம்முடைய நாட்டில் அரசியல் புரட்சியும் சமுதாயப் புரட்சியும் தோன்றிய பிறகுதான் கல்வி, மொழி, கலை, இலக்கியம் ஆகியவற்றை உட்கொண்ட புது மலர்ச்சிக்கான பண்பாட்டுப் புரட்சி தோன்றி யிருக்கிறது. நமக்குப் பண்பாட்டுப புரட்சி மட்டுமே இன்று பெரும்பாடாய் இருக்கிறது. அதனால்நாம் எதிர் அணியில் சிக்கல்களை நோக்கிச் செயல்படுகிறோம். இதை அவர்கள் புரிந்துகொள்ளவில்லை'' - என்று இலெனின் புரட்சிப் பாதையில் எதிர்நோக்கிய சிக்கலில் அக்கறையைக் காட்ட வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்தி இருக்கிறார்.

## உருசிய மொழி அகராதி

''தோழர் உலுனாசார்ஸ்கி',

அண்மையில் 'தால்' அகராதியைப் பார்க்க நேரிட்டது. மிகவும் வேதனையும் தலைகுனிவும் ஏற்பட்டன.

அது மிகப் பெரிய சாதனைதான், ஆனால் அதில் வட்டாரச் சொற்களும், வழக்கிழந்த சொற்களும் பல கண்டேன். உருசிய மொழிக்குரிய உண்மையான நல்ல அகராதி ஒன்றினை உருவாக்க வேண்டிய காலம் வந்துவிட்டது.

நமது இலக்கியங்களில் உள்ள சொற்களும், இன்று வழக்கில் உள்ள சொற்களும், குறிப்பாகப் புரட்சிப்பாவலர் பூட்கின் காலத்தில் இருந்து கோர்க்கி காலம் வரை தொகுத்து ஓர் அகராதியை உருவாக்க வேண்டும். 30 பேர் புலமை பெற்றவர்களுக்குப் போதிய ஏந்துகள் செய்து கொடுத்து இந்தப் பணியில் ஈடுபடுத்தவேண்டும்.

இதைப்பற்றி உங்கள் கருத்து என்ன?

உருசிய இலக்கிய மொழி அகராதியின் தேவை பற்றி என்ன நினைக்கிறீர்கள்!

எந்த வகையான வெளிப்படையான முயற்சியும் மேற்கொள்ளாமல்; உலகறிவு மிகுந்த, தகுதி வாய்ந்தவர்களுடன் இது குறித்துக் கலந்து ஆய்ந்து உங்கள் முடிவைத் தெரிவிக்க வேண்டுகிறேன். இதில் பெருந்தொல்லை இருக்காது''.

என்று ஒரு மடல் இலெனின் எழுதியிருப்பது நோக்கத்தக்கது. அவர் தம் தாய்மொழிக்கு ஒரு தலைசிறந்த அகராதியை உண்டாக்க வேண்டும் என்பதில்கூட அக்கறை காட்டியிருப்பது வியப்புக்குரியது.

### 2

''தோழர் போக்வெஸ்கி,

அண்மையில் தோழர் உலுனாசர்ஸ்கிக்கு ஒரு மடல் எழுதியிருந்தேன். உருசிய மொழிக்கு ஒரு நல்ல அகராதி தேவை என்பது குறித்து அவரிடம் நேரில் பேசினேன். 'தால்'

அகராதி போன்றதன்று! பூட்கின் காலத்திலிருந்து கோர்கி காலம்வரை நமது மொழியின் வளத்தை ஆய்வு செய்து பயன் படக்கூடிய ஓர் அகராதியை உருவாக்க வேண்டும். 30 அல்லது அதற்கும் மேலானவர்களையோ, இந்தப் பணியில் ஈடுபடுத்தி அவர்களுக்குத் தேவையான ஏந்துகளைச் செய்து கொடுத்து இந்தப் பணியைச் செய்திட வேண்டும்.

ஏற்கனவே இதைப்பற்றிச் சிந்தித்து வருவதாக உலூனாசர்ஃகி கூறினார். அதற்கு மேல் என்ன ஆயிற்று என்பது தெரிய வில்லை.

அப் பணி மேற்கொள்ளப்பட்டு வேலைகள் நடைபெற்று வரு கின்றனவா, இல்லையா என்பதைக் கண்டறிந்து எனக்கு அருள் கூர்ந்து விடை எழுதவும் .

என்று இலெனின் மற்றும் ஒரு மடலை 1920 மே திங்கள் 4-ஆம் நாள் எழுதியிருக்கிறார். முதல் மடல் சனவரி திங்கள் 18-ஆம் நாள் தான் எழுதியிருக்கிறார் ; மூன்று மாத காலம் இடைவெளி கொடுத்து மீண்டும் அகராதித் தொகுப்புக் குறித்து எழுதி யிருக்கிறார் என்பதை நினைக்கும் போது, இலெனின் எந்த அளவிற்கு அகராதியைப் படைப்பதில் பேரார்வம் காட்டியிருக் கிறார் என்பது புலப்படும்.

## 3

"தோழர் இலட்கின்சு,

நாம் சந்தித்துப் பேசிய நேரத்தில் நமது மொழி வல்லுனர்கள் பூட்சின் காலம் முதல் கோர்கி காலம் வரை நம் மொழியின் பன்முகமான சொற்களைத் தொகுத்து; புதிய அகராதி ஒன்று படைப்பது குறித்து வினவ மறந்துவிட்டேன்.

தோழர்கள் பொக்ராவஃகி, உலுனாசார்ஃகியுடன் கலந்து பேசி அதற்கான ஏற்பாடுகள் செய்தேன்.

அந்த வேலை நடைபெறுகிறதா இல்லையா? சுருக்கமாக சரியாகக் கண்டறிந்து உடன் எனக்குத் தகவல் தரவும்''
என்று மூன்றாவது மடல் ஒன்றும் மே மாதம் 6-ஆம் நாள் 1921-இல் இலெனின் எழுதியிருக்கிருர். இதிலிருந்து நல்ல நிறைவாக்கப் பணி சோர்வில்லாமல் சுருசுருப்பாகச் செய்யப்பட வேண்டும் என்பதில் இலெனின் காட்டியிருக்கும் ஆர்வம் நன்கு விளங்குகிறது.

உருசிய புரட்சிக்குத் தலைமை ஏற்று பல்வேறு பொறுப்புகளை அவர் கடமை உணர்வோடு செயலாற்றும் இக்கட்டான நிலையிலும் கூட இலெனின் தேசியமொழி, கலை, இலக்கிய, வளர்ச்சியில் நாட்டம் கொண்டு, அதனையும் விரிவாக விரைவாகச் செய்திட வேண்டும். என்று பலரைத் தூண்டியிருப்பது, அவருக்கு மொழி வளர்ச்சியில் எவ்வளவு பற்றும், ஆர்வமும் இருந்திருக்கிறது என்பதையும் இதன் மூலம் அறிகிரேும்.

ஒருவரிடம் பொறுப்பை ஒப்படைத்து விடுவதன் மூலமே தம் வேலை முடிந்து விட்டது என்று மன நிறைவு கொள்ளாது, ஒப்படைத்த வேலை மேற்கொள்ளப்பட்டதா இல்லையா என்று கண்டறியவும், அதற்கான வழி முறைகளைக் கூறியும், அப் பணியில் ஈடுபடுவர்களுக்கான ஏந்துகளைச் செய்ய வேண்டும் என்றும் இலெனின் வற்புறுத்தி இருப்பது எதையுமே அவர் தீவிரமாக, எண்ணிச் செய்பவர் என்பது புலப்படுகிறது.

உருசிய மொழி வளர்ச்சிக்கும், வளத்திற்கும், ஏற்றத்திற்கும் இலெனின் எந்த அளவிற்கு பாடுபட்டிருக்கிறார் என்பதைக் காண எவருக்குமே வியப்பு ஏற்படாமல் இருக்க முடியாது.



''துர்கினேவ், தால்சுதோய், தோப்ரோல், யுபோவ், சேர்னிஃ வசுகி, ஆகியவர்களின் மொழி மிகவும் உயர்ந்தது. பேராற்றல் வாய்ந்தது. உருசியநாட்டில் குடியிருக்கும் ஒவ்வொரு குடிமகனும் உருசிய மொழியைக் கற்றிட வாய்ப்பும் வசதியும் உண்டாக்க வேண்டும் என்பது நம் விருப்பம்.'' - வி. இ. இலெனின்

மேலும் பேச்சுவழக்கில் மட்டும் வாழ்ந்து, எழுத்துருவம் பெறாத பல தேசிய இன மொழிகட்கும் எழுத்துருவம் தந்து அம் மொழிகளை இன்று உலகறியச் செய்த பெருமையும் இலெனினைச் சாரும்.

மற்றும் ஒரு தனிச்சிறப்பும் இலெனினுக்குண்டு. வரலாற்றை எட்டிக் காணும் கி. மு-விலிருந்து கி. பி. 20- ஆம் நூற்றாண்டு வரை எந்த ஓர் இலக்கியவாணரோ, அரசியல், பொருளியல், சமுகவியல், அறிவியல் அறிஞரோ கையாளாத வகையில் தம் எழுத்திலும் பேச்சிலும் 37500 சொற்ளைக் கையாண்டுள்ளார். இலெனினின் சொல்வினை ஆற்றல் வியப்புக்குரியதன்று, மருட்கைக்குடையது. மொழியையே விழியாகக் கொண்ட கழிபெரும் புலமையாளரும் இலெனினைப் போல் விழுமிய செழுமியராக இருப்பரோ, என்பது ஐயமே !

## இலெனின் சொல் அகராதி

இலெனின் பயன்படுத்திய சொற்கள் அடங்கிய அகராதியை வெளியிடச் சோவியத்து அறிவியல் பேரவையின், உருசிய மொழிக் கழகம் ஏற்பாடு செய்து வருகிறது. உருசிய மொழி அகராதி எதிலும் இல்லாத 4000 சொற்களை இலெனின் பயன் படுத்தினார் என்பது ஆராய்ச்சிகளிலிருந்து தெரிகிறது. அவ ருடைய பேச்சுகளிலும் எழுத்துகளிலும் 12,000 சொற்கள் ஒரே ஒரு முறைதான் பயன்படுத்தப்பட்டுள்ளன. இலெனின் மொத்தம் 37,500 சொற்களைப் பயன்படுதியிருக்கிறார். (சர்வொண்டீசும் புஷ்கினும் தலா 20,000 சொற்களையும், பொலிவான் 16,000 சொற்களையும், ஷேக்ஸ்பியர் 15,000 சொற்களையும் தான் பயன்படுத்தினர் என்பது இங்குக் குறிப் பிடத் தக்கது).

இந்த அகராதி வெளியிடப்படுவது, புதிய மொழி இயலில் குறிப் பிடத்தக்க ஒரு நிகழ்ச்சியாகும் என்று, இந்த அகராதியைத் தொகுக்கும் குழுவின் தலைவரான பியோதர் தெனிசேர்வ் கூறி னார். இலெனின் பயன்படுத்திய சொற்கள் உருசிய மொழி மீது மிகுந்த செல்வாக்கு ஏற்படுத்தியதாகவும், ஆகவே அவற்றை ஆராயாமல் இப்பொழுது உருசிய மொழியைக் கற்பது இயலாது என்றும் அவர் குறிப்பிட்டார்.

காலப் போக்கில் எல்லா மொழிகளுமே மாறுதல் அடைகின்றன. உருசிய மொழியும் அதற்கு விதிவிலக்கில்லை. இலெனின் பயன் படுத்திய சில சொற்களின் பொருள் புதிய வாசகர்களுக்குத் தெளிவாகப் புரியாவல் இருக்கக்கூடும்; இப்பொழுது ஆக்கப் பட்டு வரும் அகராதி, அவற்றிற்குத் தெளிவான விளக்கம் கொடுக்கும். இலெனின் நூல்களை அயல் மொழிகளில் மொழி பெயர்க்க இது பெரிதும் உதவியாக இருக்கும். பல உருசியச் சொற்களையும் சொல்-தொடர்களையும் இலெனின் எந்தப் பொருளில் பயன்படுத்தினார் என்பதை இந்த அகராதி விளக்கும்.



## உருசிய மொழிபற்றி சோவியத்து அறிஞர்கள்

உருசிய மொழி பல ஆயிரக்கணக்கானப் ஆண்டுகளாக பேணிக் காக்கப்பட்டு, வளமான மொழியாகவும், அறிவின் ஊடக மாகவும், பாட்டுக்கும், சமுதாய வாழ்வின் ஏற்றத்திற்கு வழி காட்டியாகவும், மக்களின் எண்ணங்களையும், உணர்வுகளை யும், நம்பிக்கைகளையும், வேதனைகளையும், அவர்களின் எதிர்கால வேட்கையையும் எடுத்துக்காட்டும் மொழியாக வளர்க் கப்பட்டிருக்கிறது.



உருசிய மொழியின் தூண் போன்று விளங்கியவர், கவிஞர் அலெக்சாண்டர் பூட்கின். பூட்கினைப் போன்று உருசிய மொழிக்கு ஏற்றம் தந்தவர்களில் இலெர்மான்தோவ், இலேயோ தால்சுதாய், இலெகோவ், செகோவ், கோர்கி குறிப்பிடத் தக்கவர்களாரவார்கள்.

- ஏ. என். தால்சுதோய்

உலகத்தின் பெரும்பகுதியை ஆட்சி செய்திடப் பயன்படுத்தப் பட்ட உருசிய மொழி இயற்கையாகவே வளம் நிறைந்த, அழகான, ஆற்றல் படைத்த மொழியாகும். இந்த அளவிற்கு வேறு எந்த ஐரோப்பிய மொழியும் வளம் பெற்று இருக்க வில்லை. மற்ற மொழிகள் அடைந்திருக்கும் தனிச் சிறப்புகள் அனைத்தும் உருசிய மொழியின் மூலம் அடைய முடியும் என்பதில் ஐயத்திற்கு இடமில்லை.



மற்ற மொழிகளுடன் ஒப்பிடும்போது உருசிய மொழி தனித் தன்மையுடன் சிறந்து விளங்குகிறது. உருசிய மொழிக்கு ஈடாக வேறு எந்த ஐரோப்பிய மொழியும் இல்லை. உருசிய

மொழி நீண்ட, விரிந்த, பரவலான பகுதியில் பேசப்படுகிறது. உருசிய மொழி மற்ற மொழிகளைவிட வளமடைந்த உயரிய மொழியாகும்.

நம் முன்னோர்கள் எழுத்துப் படைப்புகளுக்கான விதிமுறைகள், கோட்பாடுகளைப்பற்றி அறியாத காலத்தில்-நல்ல நூல்களைப் படைத்து நமக்கு அளித்திருப்பதிலிருந்து, நமது மொழியின் சிறப்பையும், வளத்தையும், எழிலையும், ஆற்றலையும் நம்மால் தெளிவாக அறிய முடிகிறது.

- மிகயேல் லோமனாசேரவ்

நமது உருசிய மொழி இலத்தீன் மொழியின் வளர்ச்சியி லிருந்தோ, கிரேக்க மொழியின் சொற்களிலிருந்தோ வளர்ச்சி பெற்றதாக அயல்நாட்டு அறிஞர்கள் குறிப்பிடவில்லை.

- சி. ஆர். தெர்சாவின்

இன்றுள்ள மொழிகளில் உருசிய மொழி மட்டுமே எதனையும் தெளிவாக விளக்கக் கூடிய அமைப்பையும், எதையும் அழுத்தம் திருத்தமாக எடுத்துக் காட்டக் கூடிய ஆற்றலையும், பல்வேறு வகையில் தெளிவு படுத்தக் கூடிய வலிமையும் பெற்ற சிறந்த இலக்கிய மொழியாக விளங்குகிறது.

- நிகோலாய்
தோப்ரோலியூபவ்

உலக மொழிகளில் மிகவும் வளமான மொழியாக விளங்குவது உருசிய மொழி என்பதில் ஐயத்திற்கு இடமில்லை.

-விசாரியன் பெலின்சுகி

உருசிய மொழி மக்களுக்கு எளிதான மொழியாகவும், எதனை யும் முழுவல்லமையுடன் எடுத்துக் கூறக்கூடிய வன்மைமிக்க, வியப்புக்கு உரிய நல்ல மொரழியாகத் திகழ்கிறது.



என் தாய்நாடு தொல்லைகள் நிரம்பிய நிலையில் தவித்த போதும், வேதனைகளை நுகர்ந்த காலகட்டத்திலும், உருசிய மொழி ஒரு பெரிய, வல்லமை நிரம்பிய, உயர்ந்த, உண்மை யான மொழியாக இருந்து எனக்குத் தூண் போன்று உதவியது. அப்படிப்பட்ட மொழியைப் பெற்ற நாடு உயர்ந்த நாடாக விளங்காது என்று நினைக்கவே இடமில்லை.

- இவான் துர்கினீவ்

நமது மொழியின் உயர்வை நினைக்கும்போது திகைத்து விடுகிறோம். அதன் ஒலிப்பும் ஓசையும் நமக்கு கிடைத்த அன்பளிப்பாகும். அனைத்தும் முத்துக்குவியலாக விளங்கு கிறது. ஆம், உருசியமொழி குறிக்கும் பொருளைவிட அந்தச் சொல் மிகவும் விலைமதிக்க இயலாததாக விளங்குகிறது.



உருசிய மொழியில் தேர்ந்தெடுத்துப் பயன்படுத்தப்பட்ட சொல் போன்று ஆழமான, மிகவும் விளக்கமான, ஓசை நயம் கொண்ட, பொருத்தமான சொல் வேறு எந்த மொழியிலும் இல்லை.

- நிகோலாய் கோகல்



திறமையுடன் எழுதவும், பேசவும் பழகிக் கொண்டவர்களுக்கு உருசிய மொழி, அழகிய, இனிமையான தெளிவான, எளிதான, இசைவான, விரைவுடன் கூடிய, செழுமையான மொழியாக அமைந்துள்ளது.

- அலெக்சாண்டர் குப்ரின்

உயர்ந்த மேடைப் பேச்சுக்கும், கேட்பவர் மகிழவும், நினைத்ததை அப்படியே பாட்டாகப் படைப்பதற்கும் நமது மொழி தகுதியானது. அது மட்டுமில்லை. நெஞ்சத்தில்

இடம் பெறத்தக்க சொற்களை மலிவாகக் கொண்டது. பிரெஞ்சு மொழியைவிட இனிமையானது. உள்ளத்தில் உதிக்கும் கருத்துகளை குரல் நயத்துடன் எடுத்துக்கூற ஏற்றது, சொல்வளம் கொண்டது, அடிப்படை மொழிகளுக்கு மட்டுமே இப்படிப்பட்ட தகுதிக் கூறுகள் காணப்படும். அந்த வகையிலும் உருசியமொழி சிறந்து விளங்குகிறது.

- நிகோலாய் கரம்சின்

இலக்கியப் படைப்புக்குத் தேவையான தகுதியை மற்ற எந்த ஐரோப்பிய மொழிகளைவிட உருசிய மொழி பெற்றிருக்கிறது.

அலெக்சாண்டர் பூட்கின்

இப்போது நாம் பெற்றிருக்கும் உருசிய மொழி 18-ஆம் நூற்றாண்டில் சிறந்த அறிவியல் மொழியாக வளர்க்கப்பட்டதாகும். எதையும் எப்படி வேண்டுமானாலும் எடுத்துக்கூற செழுமை பெற்றது. செர்மன் மொழியில் இயற்கையைப் பற்றிய அரிய சிந்தனைகளையும், பிரெஞ்சு மொழியில் காணப்படும் நகைச் சுவையும், நமது உருசிய மொழியில் வெளிப்படுத்த இயலும்.

நமது மொழியின் சிறப்புக்கு அடிப்படைக் காரணம் அது கடினமாக அல்லாதது. எதை வேண்டுமானாலும் எடுத்துக்கூற இயலும். நுணுக்கமான கருத்துகளை, உணர்ச்சி மிக்க பாடல் களை, வாழ்க்கையின் பல்வேறு கட்டங்களைக், கற்பனையில் தோன்றும் எண்ணங்களைப், பொங்கிவரும் இன்பங்களை, உள்ளத்தின் வேட்கையை எல்லோருக்கும் எளிதில் புரிந்து கொள்ளக் கூடிய சிறப்பு நமது மொழிக்கு இருக்கிறது.

- அலெக்சாண்டர் எர்சன்

மக்கள் பேச்சு மொழிக்கும் உருசிய இலக்கிய மொழிக்கும் மிகவும் நெருக்கமான பிணைப்பு உள்ளது. வேறு ஐரோப்பிய மொழிக்கு அப்படியில்லை.



உருசிய மொழியில் ஏராளமான பெயர்ச் சொற்களும், வினைச் சொற்களும் குவிந்து காணப்படுகின்றன. அசைவுகளையும் நடமாட்டத்தையும், எண்ணங்களையும், சிந்தனைகளையும், வண்ணங்களையும், நுகர்வையும், பொருள்களையும் தெளிவாக விளக்கக் கூடிய தகுதி பெற்றிருப்பதால் உருசிய மொழி ஓர் அறிவியல்மொழி. நாகரிகத்தை வளர்க்கும் நமக்கு மிகப்பெரிய ஆற்றலாக விளங்குகிறது.

- ஏ. என். தால்சுதோய்

வாழ்க நம் மொழி! அது நம் நாட்டிலேயே அதிக வளமாக விளங்குகிறது. அயல்நாட்டு மொழி கலக்காதது. அது ஓர் ஆற்றைப் போல் பெருமையுடன் அழகாக ஓடுகிறது. அது பெருமிதமாக இடிமுழக்கம் செய்கிறது. தேவை ஏற்படும் போது எளிய ஓடையைப் போலக் காட்சித் தருகிறது. அது உள்ளத்தில் பாய்ந்திடவும், மாந்தர் குரல்தனை உயர்த் திடவும் செய்கிறது.

- நிகோலாய் கரம்சின்

நமக்குப் பேச்சுக்லை மிகவும் எளிமையாகவும், பொதுவான தாகவும் தோன்றுகிறது, ஆனால் அந்த பேச்சின் கருத்து மிகவும் உயர்ந்ததாகவும், வியக்கத்தக்கதாகவும் உள்ளது.

- ஏ. ஏன். இராதிசெவ்

நமது மொழிக்கு ஏராளமான சிறப்புகள் உள்ளன. அவற்றில் ஒரு தனிச் சிறப்புப் பலருக்குப் புலப்படுவதில்லை. நமது மொழியில் உள்ள ஓசை நயம், உலக மொழிகளில் உள்ள அனைத்தையும் கொண்டதாக விளங்குகிறது.



மிகவும் வளமான தம் ஆற்றல் வாய்ந்ததும் - தெளிவு தரத் தக்கதும் - மகிழ்ச்சி யூட்டத் தக்கதும், சுவைக்கத்தக்கதுமான - ஒரு மொழியின் உடைமைக்காரர்களாக நாம் இருக்கிறோம்.



உண்மையிலேயே வியக்கத்தக்க பல்வேறு சிறப்புகளைக் கொண்டது நமது உருசிய மொழி. எவர் மக்களை நேசிக்கிறார்களோ அவர்களுக்கு உருசிய மொழியின் வளம் புலப்படும். அதுவே வேர் போன்றும், கிளை போன்றும் வளர்ந்திருக்கிறது. நமது நாட்டின் எழிலைக் கண்டவர்களுக்கு இந்த உண்மை தெரியும்.



நமது மொழியில் காணப்படாத மேலான - எளிய ஓசை, வண்ணம், தோற்றம், சிந்தனைகள் எனத் துல்லியமான எதுவுமே இல்லாமல் இல்லை.

- கான்சுடான்டின் பாசுடோவாசுகி

ஐரோப்பிய மொழிகளில் காணப்படும் சிறந்த அறிவையும், உணர்வுகளையும், நமது மொழியின் மூலம் உண்டாக்க முடியும் என்கிற பெரிய உண்மையை நாம் உணர்ந்து ஏற்றம் பெற வேண்டும்.

- பியேடர் தாசுடோயேவஃகி

உருசிய மொழியும், பேச்சும் இயற்கையாகவே பெற்றுள்ள வளத்தை நினைக்கும்போதும், நாம் வாழும் காலத்திற்கு ஏற்றும், பொதுவான மக்களுடன் கொண்டுள்ள தொடர்பும், பூட்கின் படைப்புகளையும் கொண்டு, யார் வேண்டுமானாலும் எழுத்தாளனாகத் தகுதி பெற்றிட முடியும்.

- எம். எம். பிரிஃவின்

அறிவியல் கோட்பாடுகளைச் சுருக்கமாகத் தெளிவாகத் துல்லியமாக நமது மொழியின் மூலம் கூற முடியும்.

வளமான உருசிய மொழி மேலும் மேலும் வளமான மொழியாக வியக்கத்தக்க வேகத்தில் வளர்ந்துக்கொண்டு வருகிறது.

- மாக்சிம் கோர்கி

நமது மொழியைக் காத்திடுவோம். உருசிய மொழி மிகவும் போற்றுதலுக்கு உரியது. அது நமக்குக் கிடைத்த செல்வம். நம் முன்னோர்களால் நமக்குத் தரப்பட்ட நல்ல முதலீடு. அந்த ஆற்றல் வாய்ந்த படைக்கலத்திற்கு உரிய நன்மதிப்பைத் தருவோம்.

- இவான் துர்கநேவ்

மொழியை வளமாக்க பிறமொழிச் சொற்களைக் கையாள்வது உண்மையிலேயே மொழியை வளமாக்குவதன்று. அது ஒரு மொழியைக் கெடுத்துச் சீர்குலையச் செய்வதாகும்.

- ஏ. எசு. சுமரகோவ்

உருசிய மொழி போதிய அளவிற்கு வலம் பெற்றுத் திகழ்கிறது பல்வேறு பொருள்களையும், வகை வகையான உணர்ச்சிகளையும், உருசிய மொழியைக் கொண்டே பல்வேறு வழிகளில் செய்திட முடியும்.

- விலாடிமீர் கோலென்கோ.

பிறமொழிச் சொற்கள் பொருத்தமானாவை என்றோ, நல்லது என்றோ, நான் கருதவில்லை. தூய உருசியச் சொற்கள் இருக்கும் போது அவற்றை மட்டுமே பயன்படுத்த வேண்டும். நமது சிறந்த மொழி, நமது வளமான மொழியை அழிவிலிருந்து நாம் பாதுகாக்க வேண்டும்.



பிறமொழிச் சொற்கள், அடிக்கடி தேவை இல்லாமல் உருசிய வெளியீடுகளில் புகுத்தப்பட்டு வருவது வேதனைக்கு உரியது. அதிலும் உருசிய தேசிய முன்னேற்றத்திற்காகவும், நம் தேசிய கோரிக்கைகளுக்காகவும் பாடுபடுவதாகக் கூறிக்கொள்ளும் வெளியீடுகளிலேயே இந்தக் கேட்டுச் சூழல் காணப்படுகிறது.

- நிகலாய் இலெஸ்கோ

பிறமொழிச் சொற்களுக்கு ஈடான சரியான உருசிய மொழியில் சொற்கள் இருக்கும்போது, பிற மொழிச் சொற்களைப் பயன் படுத்துவது பொது அறிவையும், நல்ல பழக்கத்தையும் அவமதிப்பதாகும்.



உருசிய மொழியில் சொற்பொழிவாற்றும்போது தேவையில் லாமல் பிறமொழிச் சொற்களை அள்ளி வீசுவது பொது அறிவுக்கும், நல்ல பழக்கத்திற்கும் புறம்பான செயலாகும்.

- விசாரின் பெலின்சுகி

நம் ஒவ்வொருவருடைய கல்விக்கும், பொதுவாகக் கல்வியின் நிலை உயரவும், நம்முடைய தாய்மொழியே அடிப்படையான இன்றியமையாததாய் அமையவேண்டும்.

- பி. ஏ. வியசெம்சுகி

நம்முடைய சிறந்த எழுந்தாளர்கள் நமக்குப் படைத்துள்ள எழுத்தோவி பங்களை நாம் போற்றிப் பாராட்டிப் பாதுகாக்க வேண்டும்.

- திமிட்ரி பர்மனோவ்

நாட்டுப் பற்று கொண்டவனுக்கு மொழிப்பற்றும் இருப்பது இன்றியமையாததாகும்.

- நிகலோவ் கரம்சன்

மொழியைப்பற்றி ஒருவன் கொண்டுள்ள கருத்தை அடிப்படை யாகக் கொண்டு அவனுடைய பொதுவாழ்க்கையையும் பண் பாட்டு நிலையையும் சரியாக மதிப்பிடலாம்.



தாய்மொழி மீது உண்மையான பற்று இல்லாதவனிடம் நாட்டுப் பற்று இருக்கும் என்று நினைப்பதற்கே இடமில்லை.

- கான்சுடான்டின் பாசுடோவஃகி

மொழி என்பது மக்களின் வரலாறு. அது தான் நாகரிகத்திற்கும் கலாசாரத்திற்கும் வழிகாட்டி. அதனால் தான் உருசிய மொழியைக் கற்பதும், அதனைப் பாதுகாப்பதும் மிகமிக அவசியமாகும்.

- அலெக்சாண்டர் குப்ரின்

உருசிய மொழி உலக மொழியாக மலரவேண்டும். அந்த நேரம் வரும். வெகு விரைவாக வரும். உலகம் முழுவதும் உருசிய மொழி கற்கப்படும்.

- ஏ. என். தால்சுதோய்

உருசிய மொழி என்பது இலெனினின் மொழி.

- மிகேல் காலினின்

உருசிய மொழிக்கு நன்றி கூறுவோம்! விதவிதமான தேசிய இலக்கிய வாணர்களான நாம் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டோம். உருசிய மொழியின் மூலம், உருசிய நூல்களின் மூலம் நாம் இலக்கிய வளத்தைப் பெற்றிட முடிந்தது. நம் நாட்டில் ஓர் எழுத்தாளன் உருசிய மொழியில் எழுதிய நூல் ஒன்றினை வெளியிடுகிறோம் என்றால், அந்த நூல் பரவலாகப் பல்வேறு இடங்களில் பலரால் படிக்கப்படுகிறது.

- யூரி இரிட்தியூ

ஃ ஃ ஃ